*Ūḻiyaṉ*

*Malar 18, itaḻ 34*

*February 23, 1939*

Record no. 148

REG. NO: M. 3888 16 பக்கங்கள் விலை அணா ஒன்று

சந்தா விகிதம்
உள்நாடு வருடச் சந்தா .... 5—0—0
பர்மா வருடச் சந்தா .... 6—0—0
வெளிநாடு வருடச் சந்தா .... 7—0—0

# ஊழியன்

விளம்பர விகிதம்
பக்கம் 1-க்கு வாரம் 1-க்கு 0—8—0
1—0—0

(தேசிய வாரப் பத்திரிகை)
வியாழன் தோறும் வெளிவருவது

மலர் 18 | காரைக்குடி, வெகுதானியஹு மாசிமீ 12உ வியாழன் (23--2—1939) | இதழ் 34

## கிராமங்கள் மூலம் இந்தியா

வேங்கடரமணி

"காந்தியடிகள் ஒரு பெரிய மகான். ஆத்ம சக்தி கொண்டவர். ஆகவே, அரசியல் உலகத்தில் திட்டம் வகுத்துக்கொடுப்பதில் அவர் மிகக் கெட்டிக்காரர். அவருடைய மகத்தான திட்டங்களைச் சரிவர நிறைவேற்றி வைப்பதற்குப் போதிய 'இஞ்சினீயர்கள்' இல்லை. சி. ஆர். தாஸ் காலஞ் சென்றார். நம் 'சி. ஆர்' போன்ற காரியவாதிகள் ஒரு சிலர்தான் இருக்கிறார்கள். இத் தேசத்துக்கு இவர்கள் போதாது. நாடு முழுதும் ஏகோபித்து அலுவல் முறையை நிர்ணயிக்கவேண்டும். இதில் பல்வேறு அபிப்பிராயங்களும் கூறப்படல் வேண்டும். ஆனால் அதன் முடிவில் ஏற்படும் அலுவல் முறைக்குப் பின்னர், அபிப்பிராய பேதமே இல்லாமல் தேசமுழுதும் ஒரு முகமாய் நின்று அதனை நிறைவேற்றி வைக்கவேண்டும். அந்த முறை நல்லதோ தீயதோ, அது தேசம் வகுத்த முறை. சர்வாதிகாரம் பெற்றது போல அம்முறை புகுத்தப்படவேண்டும். கல்வி யென்றும், தீண்டாமை விலக்கென்றும், மதுபான ஒழிப்பென்றும், கதரென்றும், சுதேசியென்றும் பிரித்துப் பிரித்துத் திட்டங்கள் போடுவதில் பயனில்லை. சர்வமும் அடங்கிவிடும் வகையில் அலுவல் முறை அமையவேண்டும். இது கிராமத்திலிருந்து, கிராமத்திலுள்ள குடிசையிலிருந்து, குடிசையிலுள்ள விவசாயியின் நிலைமையிலிருந்து புறப்படவேண்டும்"

என்று குறிப்பிட்டார், ஸ்ரீ கே. எஸ். வேங்கடரமணி, சென்ற 20-2-39உ காலை; எஸ்.எம். எஸ்.பாடசாலைக் கட்டிடத்தில். இக் கூட்டத்துக்கு ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் தலைமை வகித்தார். பிரபல ஆங்கில எழுத்தாளரும் 'பாரதமணி' பத்திரிகையின் ஆசிரியருமாகிய ஸ்ரீ வேங்கடரமணியின் பிரசங்கத்தைக்கேட்க வெளியூர்களி லிருந்தும் பல அறிஞர்கள் வந்திருந்தார்கள்.

தலைமை வகித்த ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் தம் முன்னுரையில் தற்காலக் கல்வி போதனை முறையைக் கண்டித்துப்பேசினர். ஆங்கில மொழி மோகம் அநாவசியமான தென்றும், ஆங்கில இலக்கியம் தமிழ் இலக்கியத்தைவிட சிறந்ததல்ல வென்றும், பிறமொழி இலக்கியத்தைச் சரிவர சுவைப்ப தென்பது முடியாத காரியமென்றும், 12வயதுப் பிள்ளைகள் 'பிரவுனிங் ஷேக்ஸ்பியர்' ஆகியோரை அறிய வல்லார் அல்லர் என்றும்தெரிவித்தார்.

"மேலும் அவர் கூறியதாவது:—

ஒரு பையனிடம் தண்ணீர் கொண்டுவரச் சொல்லுங்கள். கொஞ்சம் உப்பும் கொண்டுவரச் சொல்லுங்கள். உப்பைத் தண்ணீரில் கொட்டச் சொல்லுங்கள். உப்புகரைந்துவிட்ட தென்பான். சுவைக்கச் சொல்லுங்கள். பிறகு சிறிது நேரம் அடுப்பில் வைக்கச் சொல்லுங்கள். 'தண்ணீர் நீராவியாய்ப் போய்விட்டது. உப்புதான் மிஞ்சிற்று' என்பான். ஆகவே 'எந்த வஸ்துவையும் மனிதரால் அழிக்க முடியாது' என்று நீங்கள் சொன்னால் அவன் ஏற்றுக்கொள்வான். ஆனால் 'சயன்ஸ்' உபாத்தியாயர் என்ன செய்கிறார்! உப்பை எடுத்துக் கொள்ளச் சொல்லுகிறார். பிறகு 'டெஸ்ட் டியூப்' ஒன்றை எடுத்துக் கொள்ளச் சொல்கிறார். அதில் தண்ணீரை ஊற்றச் சொல்கிறார். ஏன் இவ்வளவு சிரமம்! 'தண்ணீர் கொண்டுவா' என்றால் ஒரு பாத்திரத்தில் கொண்டு வராமல் வேறு எப்படிக் கொண்டு வருவான்! அது கிடக்கட்டும். பிறகு உப்பைத் தண்ணீரில் கொட்டச் சொல்வதும், கலக்கிக் கரைக்கச் சொல்வதும், 'ஸ்பிரிட் லாம்ப்' என்ற விளக்கில் 'டெஸ்ட்டியூப்' பைத் தூக்கிப் பிடிக்கச் சொல்வதும், அப்படிப் பிடிக்க ஒரு குரடு கொடுப்பதும் எவ்வளவு வீண் வேலை! பையன்களுக்கு எவ்வளவு மூளைக் குழப்பம்! உபாத்தியாயர் இதைத் திருப்பிச் சொல்லச் சொல்லும் போது, பையன் என்ன சொல்கிறான்! தண்ணீரை எடுத்துக்கொள்ளச் சொல்கிறான்; தண்ணீரில் டெஸ்ட் டியூப்பை ஊற்றச் சொல்கிறான் (சிரிப்பு). உப்பை நெருப்பில் காட்டச் சொல்கிறான். உப்பு கரைவதற்காக நெருப்பைக் கலக்கச் சொல்கிறான். (சிரிப்பு)இப்படியே வார்த்தைகளின் பொருள் தெரியாமல், அல்லது அந்நிய மொழி வார்த்தைகளின் பொருளை உபயோகிக்கும்போதே உணராமல் தடுமாறி விடுகிறான். எவ்வளவு ஆபாசம்! எவ்வளவு அபத்தம்! வஸ்து அழியாத்தன்மையை உடையது என்பதை விளக்க ஆங்கிலத்திலே எவ்வளவு கரடுமுரடான வார்த்தைகளைக் கொண்ட வியாக்யானம்! பையன் நாக் குளற, வாய் குளற, மூளை குழம்பப் பிதற்றுவதில் ஆச்சரியப்படலாமா! தவிர, வஸ்து அழியாத்தன்மை பெற்றது என்பதை அவன் அறியாவிடில் அவனுடைய வாழ்க்கையிலே என்ன நஷ்டம்? இதெல்லாம் நம் தலைவிதிதான்!

"அடுத்தபடியாக பாடசாலைகளில் உள்ள நேரமே கல்வி போதனைக்குரிய நேரமில்லை. நன்றாகச் சாப்பிட்டுவிட்டு பையன்கள் வருகிறார்கள். உபாத்தியாயரும் வருகிறார். ஆகாரத்தைஜீரணிப்பதற்காக இரத்த ஓட்டம் முழுதும் வயிற்றுப்பக்கம் தீவிரமாய்ப் பாய்கிறது. அப்போது பையன்களுடைய மூளையில் என்ன இருக்கப்போகிறது? உபாத்தியாயர் மூளையில்தான் என்ன இருக்கும்? (சிரிப்பு)

ஆதலின் ஆங்கிலமொழி மோகமும் மனப்பான்மையும் அறவே மாறவேண்டும்; மாறியே வருகிறது."

ஸ்ரீ வெங்கடரமணி ஆங்கிலத்தில் கூறியதாவது:—

"பேசுவதைக்காட்டிலும் எழுதுவதைக்காட்டிலும் கவனிப்பதில்தான் எனக்கு மிகுந்த பிரியம். கல்வியைப் பற்றி நாம் இப்போது பேசவேண்டும். உடலுக்கு ஜீரண சக்தி எப்படியோ அதைப்போல மனிதனுக்குக் கல்விப் பயிற்சியாகும். இரத்த ஓட்டம் சரிவர இருக்கவேண்டியது எவ்வளவு அவசியமோ அதுபோலவேதான் கல்விப் பயிற்சி முறையும் சரியானதாயிருக்க வேண்டும். கல்வியின் மூலமே மனித வர்க்கத்துக்குக் கலையுணர்ச்சியும் நாகரிகமும் ஏற்படும்.

எந்த விஷயத்தில் முற்போக்கடைவதா யிருப்பினும் அதற்கொரு திட்டம் வகுக்கப்படவேண்டும். கல்வி விஷயத்துக்கும் ஒரு திட்டம் வேண்டும். காந்தியடிகள் வகுத்துள்ள வார்தா திட்டம் மிகச் சிறந்தது. இது பற்றிப் பின்னர் கவனிப்போம்.

புராதன காலத்தில் இந்தியாவில் இருந்துவந்த ஆசிரம வாழ்க்கை கல்வித் திட்டத்தை அடிப்படையாய்க் கொண்டதாகும். நான் சொல்லப் போவதும் அதனை ஒட்டியேயிருக்கு மென்பதை உங்களுக்குத் தெரிவிக்கின்றேன்.

கல்விப் பயிற்சியில் மூன்று முக்கிய அம்சங்கள் இருக்கின்றன.

1. உடற் பயிற்சி.
2. மனப் பயிற்சி.
3. மனதை ஆட்கொள்ளுகின்ற ஆன்மப் பயிற்சி.

உடலுக்கு வேண்டியது உணவு. உணவு வேண்டுமாயின் உழைத்தே தீரவேண்டும். அல்லது பிறர் உழைப்பில் வாழவேண்டும். எவ்வாறிருப்பினும் உழைப்பு இல்லாமல் நல்ல உடல் நலனைக் காணமுடியாது. ஒவ்வொருவரும் குறைந்த அளவு ஒரு மணி நேரமாவது உழைக்கவேண்டும். உழைப்பு,உணவுப்பொருளின்உற்பத்தியின் பாற்பட்டதாயிருக்கவேண்டும். காந்தியடிகள் கண்டுபிடித்துள்ள கைராட்டைத் திட்டம் இதிற் சேர்ந்தது. காந்தியடிகள் ஒரு மகான். சிவாஜிக்குப் பின்னால் காந்தியடிகளே சிறந்தவர். காந்தியடிகளைப் போன்ற ஒருவரைக் காண பல நூற்றாண்டுகள் பிடிக்கும்.

ஐந்தாண்டுத் திட்டமோ அல்லது பத்தாண்டுத் திட்டமோ, ஏதேனுமொன்றை வகுத்து, இத் தேசத்திலுள்ள தற்குறித்தன்மையைப் போக்கவேண்டும். கிராம ஸ்தாபனங்களிடம் இத்திட்டம் ஒப்படைக்கப்பட வேண்டும். கல்வி, பஞ்சாயத்து, மதுவிலக்கு ஆகிய சகலவற்றிற்கும் அது ஏற்ற திட்டமாயிருக்க வேண்டும்.

வீடு கட்டவேண்டுமாயின் ஒரு அறையை முடித்துக்கொண்டு மற்றொரு அறையைக் கட்ட ஆரம்பிப்பார் உண்டா? இம்மாகாண 4 கோடி மக்களும் ஏகோபித்து எழும்வகையில் திட்டம் வகுக்க வேண்டும். 5 அல்லது 6 கிராமங்களை ஒன்றாய்ச் சேர்க்க வேண்டும். அவற்றை ரேடியோ போன்ற உபாயங்களால் இணைக்கலாம். இக்கிராமங்கள் ஒரு அங்கமாகக் கருதப்படல் வேண்டும்.

ஆரம்பக் கல்வி 5 வயது முதல் 12 வரை ஏழாண்டுகட்கு இருக்கலாம். மனிதன் தன் உடலை வளர்த்து, அறிவை வளர்த்து, மனித சமூகத்துடன் ஒத்துவாழக் கற்றுக்கொள்ள வேண்டும். உடலுழைப்பு உணவுக்கு உதவும். மனப் பயிற்சி ஆன்ம உணர்ச்சிக்கு உதவும். அது சமாதானத்துக்கு வழி காட்டும். 'சும்மா இருப்பதரிது' என்று நம் பெரியார் கூறிச் சென்றாரே, அதற்குரிய வழியை வகுத்து வைக்கும். பெரியார் பலர் மனதையறிய புத்தகங்களே பயன்படும்.

காலை நேரமே கல்விப் பயிற்சிக்குச் சிறந்தது. முதலில் கடவுள் வாழ்த்து மிக அவசியம். சங்கீதமும் நாட்டியமும் கடவுளுக் குகந்தவை. நாதப் பிரம்மம் என்று கூறுவதைக் கேட்டதில்லையா? குழந்தைகளும் பாட்டைக் கேட்டு ஆனந்தக் கூத்தாடுவதைப் பார்த்திருப்பீர்களே!

இரண்டாவதாகக் குறைந்த அளவு புத்தகங்களை வைக்க வேண்டும். நோட் புத்தகங்கள் மிக மிகக் குறைவாயிருத்தல் வேண்டும்.

மாலையில் பிள்ளைகளைப் பிறர் தோட்டங்கட்கு அழைத்துச் சென்று அங்கு வேலை செய்ய விடவேண்டும். காலையில் 7-30 முதல் 10-30 வரையிலும் தான் படிக்கலாம். பள்ளிக்கூடத்தில் தோட்ட மிருக்கவேண்டும். பெரும்பாலும் கேள்வி மூலமே கல்வி புகட்ட வேண்டும். சர்க்கா மூலம் துணி தான் கிடைக்கும். சர்க்கா ஓரளவு சிறந்ததுதான். ஆனால் 36 கோடி மக்களுக்கும் உரிய சிறந்த ஒன்றல்ல. காந்தியடிகள் ஆத்ம சக்தி கொண்டவர். பிற இஞ்சினீயர்களே அலுவல் முறைகளைவகுக்கவேண்டும். ஸ்ரீசி.ஆர். இடச்சித்த முடைய சமர்த்தர். சிறந்த இஞ்சினீயர். இவர் போன்ற பலர் சேர்ந்து அலுவல் முறை ஒன்றை வகுத்து இந்தியக் கிராமங்களிலே புகுத்த வேண்டும்."

—காரைக்குடி இராமகிருஷ்ண விவேகானந்த சங்க ஆதரவில் நிகழ்த்திய பிரசங்கம்.

# பிரிட்டனில் லட்சம் பேர்கொண்ட புது இயக்கம்

டங்கன் சாண்டிஸ், எம். பி.

டங்கன் சாண்டிஸ் என்பவர் பிரிட்டிஷ் பார்லிமெண்டு அங்கத்தினர். தீவிர மிக்கவர். ஸ்ரீ வின்ஸ்டன் சர்ச்சிலின் மாப்பிள்ளை. பல்வேறு கட்சிகளையுஞ் சேர்ந்த, அல்லது கட்சிச் சார்பே யில்லாதவர்களாய் லட்சம் பேர்களைச் சேர்த்துக் கோண்டு, பிரிட்டனுடைய ஜனநாயுத சுதந்திரத்தை வளர்க்க ஒரு புதிய இயக்கத்தை ஆரம்பித்திருக்கிறார். இக் கட்டுரையில் கூறப்பட்டுள்ள பிரிட்டனுடைய ஆபத்தான நிலைமை இந்தியர்கள் மனதையும் இரங்க வைக்கின்றதுபோல இருக்கிறது.

★

நம் தேசத்தில் இப்போதுள்ளதைப் போல ஒரு நெருக்கடி இதற்குமுன், பல நூற்றாண்டுகளாவே இருந்தது கிடையாது. உலக விஷயங்களில் நாம் வகித்துக்கொண்டிருந்த செல்வாக்கு க்ஷீணித்துக்கொண்டே போகிறது.

சுதந்திரமும் நியாயமும் பலதேசங்களில் பறிமுதலாகின்றன. இவைகளைத் தடுக்கலாமென்றால், நாம் போதிய அளவில் துணைபுரியச் சக்தியற்றுப் போனோம். இது மட்டுமல்ல; அந்நியர் ஆதிக்கம் நம் சொந்த தேசத்துக்குள் வந்துவிடாதபடி நாம் நம்மைக் காப்பாற்றிக் கொள்வோமா என்பதுகூட சந்தேக நிலைமைக்கு வந்துவிட்டது.

நாஸி—பாஸிஸப் பலம் தினந்தோறும் அதிகரித்துக்கொண்டிருக்கிறது. அத்துடன், நம்முடைய திடசித்தத்தையும் தீர்க்க புத்தியையும் நாம் சரிவர உபயோகியாதிருப்பதால் நாமும்மற்ற ஜனநாயக நாடுகளும் அபாயகரமான நிலைமைக்கு வந்துவிட்டோம்; அரசியல், பொருளாதாரம், ஆன்மவிளக்கம் ஆகிய மூன்று துறைகளிலுமே பிற்போக்கடைந்து நிற்கிறோம்.

நம் நாட்டுக்குள்ளேயும் சுதந்திரம் என்பது சோதனைப் பருவத்தில் கிடக்கின்றது. நாம் செய்கிற விஷயங்களைப் பார்த்துவிட்டுப் பலர் நம் ஜனநாயக முறையைப் பழிக்கிறார்கள். இப்படியே நாம்போய்க்கொண்டிருப்போமானால், இன்றைக்கில்லாவிடில் என்றைக்காவது ஒரு நாள், ஒரு நெருக்கடியில், சர்வாதிகாரப்போக்கை பொதுமக்கள் ஆதரிக்க ஆசைகொண்டு விடுவார்கள்.

பிரிட்டனிடம் போதிய பலமில்லை என்று சொல்ல முடியாது. பலருடைய நல்லெண்ணமும், பொருளாதார பலமும், பிரிட்டனுக்கு உள்ளதைப்போல இந்த உலகத்தில் வேறு எந்த நாட்டுக்கும் கிடையாது. சுதந்திரம் தான் நமது அரசியல் கருவி. இதற்கு எதிரான வேறு எந்தத் திட்டத்தையும் மக்கள் விரும்ப மாட்டார்கள்.

இப்போதுள்ள நிலைமையை மிக எளிதில் நாம் முன்னமேயே தவிர்த்துக் கொண்டிருக்கலாம். நாம் மிதமாக இருந்து விட்டோம். ஆனது ஆகி விட்டது; நம்மையும் நம் தலைமையை எதிர்பார்க்கும் ஏனைய நாடுகளையும் காத்துக் கொள்வதற்குப் போதிய தருணமிருக்கின்றது. பலம், கௌரவம், சுதந்திரம் ஆகியவைகளில்லாமல் நாமும் சரி, நம் தலைமையில் நடந்துவரும் மற்ற நாடுகளும் சரி வாழ முடியாதபடி ஆகி விடுவோம்.

## ஏன் க்ஷீணித்தோம்?

நம்முடைய க்ஷீண திசைக்குக் காரணமென்ன? முதன் முதலாக நெருக்கடிகள் அல்லது கஷ்டமான சந்தர்ப்பங்கள் வந்த போதெல்லாம், நாம் அவைகளை எதிர்த்துச் சமாளிக்க விருப்பங் கொள்ளவில்லை. சமீப காலமாக, சகல கட்சிகளையுஞ் சார்ந்த பிரபல அரசியல் தலைவர் பலர் இந்த ஆபத்தான நிலைமையைத் தேசத்தாரிடம் சொல்லிக்கொள்ள பயப்படுகிறார்கள். இந்த காலத்தில் மக்கள் செய்ய வேண்டிய தியாகத்தையும் சேவையையும் பற்றி எடுத்துச்சொல்லத் துணிவுகொள்ளாமல் தயங்கி நிற்கிறார்கள். எவரேனும் மீறி ஆபத்தான நிலையைச் சொல்ல முன் வந்தால், அத்தகையோரை யுத்த வெறியாளர் என்கிறார்கள்; பயமூட்டுகிறவர்கள் என்கிறார்கள். எனவே, குற்றம் பொதுஜனங்களிடத்தில் இல்லை. உண்மையையும் ஆபத்தையும் மறைக்கின்றவர்களிடத்தில் தான் இருக்கின்றது.

ஒரு தெளிவான பிரச்னை மீது பொதுஜனங்களைக் கலந்து ஒரு முடிவுக்கு வருவது தான் சரி என்கின்ற நோக்கமுடையது ஜனநாயகம். ஆதலின், உண்மைகளை மறைக்காமல் மக்களிடம் தெரிவித்து விடவேண்டும். தேசங்களுக்குள் இருந்து வருகிற பொது விதிக்குப் பங்கம் நேரிடும் போது, நாமும் மற்ற தேசங்களைப் போல் இருந்து விடுகிறோம். பலாத்காரக் கொடுமைகள் இழைக்கப்பட்டிருக்கின்றன. எந்த தேசம் அட்டூழியம் செய்கிறதோ அதனுடைய கட்சி வெற்றியடைந்து வருகின்றது. ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும், எந்த தேசம் பிறர் கொடுமையில் சிக்கி அவதிப்படுகிறதோ, அத்தேசம் அதனுடைய தலைவிதியின்படி துர்ப்பாக்கிய நிலைமையை அடையும்படி விட்டு விடப்படுகிறது.

நாம் இராஜ தந்திரிகள். இத்தந்திரத்திலே, உலக ஜனநாயக முறை தான் பிரிட்டனுடைய ஜனநாயக முறை என்பதை மறந்துவிட்டோம். நம்முடைய முயற்சிகள் யாவும், சர்வாதிகாரிகளை மாற்றுவதில்தான் செலவழிந்துகொண்டு வருகிறதே ஒழிய, ஜனநாயக நாடுகளின் ஐக்கியத்தை ஏற்படுத்தப் பயன்படுவதில்லை. நம்மைப் போலவேதான் ஏனைய தேசங்களின் ஜனநாயக மக்களும் கௌரவமாக, அமைதியாக வாழ விரும்புகிறார்கள்.

சில வல்லரசுகள் யுத்த தளவாடங்களைக் கணக்கின்றிப் பெருக்கிவருகின்றன. எதற்கு? பலாத்கார விதியைத் தேசங்களிடையே ஸ்தாபிப்பதற்காக!

சிறிது காலத்துக்குமுன், மற்றெல்லாத் தேசங்களையும்விட பிரிட்டனே மிகப் பராக்கிரமம் பொருந்தியதாயிருந்தது. அப்போது அது பிரான்சுடன் சேர்ந்து, யுத்ததளவாடப் பகிஷ்காரத்தை வற்புறுத்தி யிருக்கலாம். வாஸ்தவமான ஜனநாயக நாடுகளின் குறைகளை நிவர்த்தி செய்ய முயற்சி எடுத்துக் கொண்டிருக்கலாம். இது முடியாவிடில், அதாவது யுத்த தளவாடப் பகிஷ்காரம் நடைபெறாமற் போயிருந்தால், யுத்த தளவாடப் பெருக்கில் ஒரு போட்டி ஏற்பட்டிருக்கும். அதிலும் பிரிட்டன் முன்பிருந்தது போலவே தனித் தலைமை வகித்திருக்கும்! நாம் இதற்குப் பதிலாக என்ன செய்தோம்? யுத்த தளவாட மகாநாடு முறிந்ததும் நாம் ஒதுங்கி நின்று வேடிக்கை பார்த்தோம். ஜர்மெனி தன் புதிய இராணுவப் படை மூலமும் ஆகாயப்படை மூலமும் நம்மைச் சுயரூபத்தில் பகிரங்கப் படுத்தி வைத்தது.

யுத்த தளவாடங்களை நாம் பெருக்கியிருந்தாலும் கூட, போதிய அளவு அதை ஏற்படுத்திக் கொள்ள முடியவில்லை, ஏனெனில் மிகத் தாமதித்தே ஆரம்பித்தோம்; சொற்ப அளவில் தான் செய்தோம்.

## சுதந்திரம் என்பது என்ன?

நமக்குச் சுதந்திரம் இருக்க வேண்டுமானால், அந்நிய நாடுகளையும் சுதந்திரமுடன் இருக்கச் செய்ய வேண்டும். தேசங்கள் ஒற்றுமையாயிருப்பதைப் பாதுகாக்க வேண்டும். பிரிட்டனுடைய கடமையும் பிரிட்டனுடைய நன்மையும் அது சுதந்திரத்தை ஆதரிப்பதைப் பொறுத்து இருக்கின்றன. எங்கெங்குஅதற்கு ஆபத்து ஏற்படுகிறதோ அங்கெல்லாம் பிரிட்டன் தலையிட்டு சுதந்திரத்தைக் காப்பாற்றித் தர வேண்டும்.

இதிலிருந்து, அயல்நாடுகளின் யுத்தத்தை பிரிட்டன் விலக்கு வாங்கிக் கொள்வதென்று ஏற்படக் கூடாது. அதாவதுபயப்படும் நாடுபயமுறுத்தும் நாடு, சமாதான வாதி-சட்டத்தை மீறுகிறவன், கொடுமை இழைப்பவன்-கொடுமை இழைக்கப்படுபவன் ஆகியவருள் நடுநிலைமை வகித்து விடக் கூடாது நாம் தீவிரமாகக் கலந்து கொள்ள லாயக்குடையவர்களாயிருக்கின்றோமா, நம்மிடம் அதற்குச் சக்தியிருக்கின்றதா என்பவற்றையுங் கவனிக்க வேண்டும். சுதந்திரம் பங்கமடைவதாயிருந்தால் பிரிட்டன் சும்மா இருக்கப் படாது.

அரசியலில் நம்முடைய பாரபட்சம் பலவிதமாயிருக்கலாம். ஆனால் நாம் அந்நிய நாட்டுக் கொள்கையை இஷ்டம்போல் கடைப்பிடிக்க முடியாத நிலையில் ஆகிவிட்டோம். சந்தர்ப்பங்கள் பலவந்தப்படுத்துகின்ற ஒரு திட்டத்தையே நாம் அவ்வப்போது கடைப்பிடித்துக் கொண்டு வருகின்றோம்.

நம்மாலான சக்தி யெல்லாவற்றையும் கொண்டு நம் படை பலத்தை நாம் பெருக்க வேண்டும். இப்படிப் பெருக்கிக்கொண்டே தனித்து நின்றாலும் போதாது. தவிர, தலைக்குமேல் வருகின்ற ஆபத்தைத் தவிர்த்துக்கொண்டு மட்டும் போனாலும் போதாது. என்றைக்காவது ஒரு நாள் எதிர்த்தேயாகவேண்டும். தாமதிக்கத் தாமதிக்க ஆபத்து அதிகமாகிக்கொண்டே தான் போகிறது.

## நாஸி—பாஸிஸத் தொல்லை

நாஸி பாஸிஸ் வல்லரசுகள் ஒவ்வொரு நாடாய் விழுங்கிக்கொண்டிருப்பதை நாம் தூரத்திலின்று பார்த்துக்கொண்டிருக்க முடியாது. ஏதோ மந்திர சக்தியால் அசைவற்றுக் கிடப்பதைப்போல இருந்து, நம் சொந்த விஷயம் வருமளவும் காத்திருக்கக்கூடாது.

நாம் ஒன்றுபட்டு வேலைசெய்ய வேண்டும்; இப்போதே வேலைசெய்ய வேண்டும். இல்லாவிடில் ஆதிக்கவெறி அதிகரித்துக் கொழுத்துப்போய், நம் நேசதேசங்கள் மிகமிகச் சொற்பமாகிவிடும். அப்போது ஒன்று சேர்ந்தால் கூட பிரயோஜனப்படாத நிலைமை உண்டாகிவிடும். இப்போதும்கூட போதுமான சாவகாசம் இருக்கின்றது. அமைதி, ஒழுங்கு ஆகியவற்றை நம்புகிற தேசங்களை ஒற்றுமைப் படுத்தினால், அவைகளை மீறிநிற்கும் தேசங்களை அடக்கிவிடமுடியும். நம்மைப் போல ஆபத்தில் சிக்கிக்கொண்டுள்ள, சமாதானத்தை விரும்புகிற தேசங்களை யெல்லாம் ஐக்கியப்படுத்துவது தான் ஒரே ஒரு வழி; உலகம் நெருக்கடியினின்றும் தப்புவதற்கு ஒரு மார்க்கம்.

உலகம் ஏகாதிபத்தியத்தின் பக்கமாய்ச் சாய்ந்துகொண்டிருக்கிறது என்பதற்கு இன்று சீனத்திலும் ஸ்பெயினிலும் நடக்கின்ற யுத்தங்களே உதாரணமாகும். மஞ்சூரியா, அபிஸீனியா, செக்கோஸ்லவகியா ஆகியவற்றின் சங்கடமான கதைகளையும் இத்துடன் கவனித்தால் தெரியும்—தேசங்களுக்குள் பரஸ்பர நம்பிக்கை ஏற்பட்டு, தேச உறுதிமொழிக்குக் கௌரவம் அளிக்கப்பட்டாலொழிய சுதந்திரமென்பது கனவு; சமாதானம் என்பதும் கனவுதான் என்று!

## சுதந்திரமும் சமாதானமும்

சுதந்திரமும் சமாதானமும் ஒரே லட்சியந்தான். சுதந்திரமில்லாத சமாதானம் ஆபத்தானது; அழிந்து போகக்கூடியது. சமாதானமில்லாத சுதந்திர வாழ்க்கை என்பது வீண் கனவு. சமாதானத்துக்கு சரியான அஸ்திவாரம் சுதந்திரம்.

மக்களுடைய சம்மதமில்லாமல், தற்காலத்தில் ஒரு யுத்தத்தை நடத்தி வெற்றி காண முடியாது. எல்லாத் தேசங்களும் இயற்கையாகவே யுத்தத்தை அருவருக்கின்றன. தங்களுடைய தேசத்துக்கு ஒரு ஆபத்து, அல்லது தேசத்துக்குச் சமான நிலையிலுள்ள ஒரு கொள்கைக்கு ஆபத்து என ஏற்பட்டால்தான் உடனே விரைந்து போர்புரியத் தொடங்குவார்கள். ஆனால் முதலாளிகள் ஆதிக்கத்துக்குட்பட்ட ஒரு தேசம், சர்க்கார் நிர்வாகத்தின் கீழ் நடைபெறும் பத்திரிகைகளை வைத்துக்கொண்டு மிகச் சுலபமாக யுத்தத்தில் கலந்து கொள்ளும்படி மக்களைத் தூண்டி விடலாம்;

(15-ம் பக்கம் பார்க்க)





# ருஷ்ய நாட்டுத் திட்டமும் தேனீ முறையும்

• ருஷ்ய நாட்டுத் திட்டத்தைப் போற்றுவார் பலர் உளர். இந்தியர்களிற் சிலர் விரைந்து அதனைப் பின்பற்ற வேண்டுமென்று தீவிரமாய் நிற்கின்றனர்.

• ஆங்கிலத்தில் 'ஹரிஜன்' பத்திரிகையைப் போன்றது ஹிந்தியில் 'ஹரிஜன் சேவக்'. 'தேனீ முறை என்ற தலைப்புடன் 'ராஷ்ட்ர வாணி' எனும் வங்கமொழிப் பத்திரிகையில் சதீத் சந்திரர் எழுதிய இக்கட்டுரை 'ஹரிஜன் சேவக்'கில் ஹிந்தியில் மொழிபெயர்க்கப்பட்டு வந்தது. இது இங்கே தமிழில் தரப்பட்டிருக்கிறது.

★

ஜன சமூகத்தின் புதிய வாழ்க்கை அருவியானது ரஷ்யாவில் பெருகி இந்தியாவிலும் அநேக வருஷங்களாகப் பரவிக்கொண்டு வருகிறது. இந்நாட்களில் இத் தேசத்திலும் குடியானவரின் கிளர்ச்சி, தொழிலாளர்களின் கிளர்ச்சி முதலிய உருவங்களில் நன்றாகப் பிரசாரத்தை அடைந்து வருகிறது. வெள்ளம் நதியில் கலப்பதால் நதியின் சுத்தமான தண்ணீரும் கலங்கலாகி விடுகிறது. அதுபோலவே ரஷ்யாவின் இந்த வெள்ளமானது இந்தியாவின் சாந்தமான, பரிசுத்தமான வாழ்க்கை நதியைக் கலங்கலாக்குகிறது. இன்று ரஷ்யாவின் அரசியலை அனுசரித்து இங்கு புதிய புதிய வார்த்தைகளும், புதிய ஜய கோஷங்களும் உண்டாகுகின்றன, ஒருவர் ஒருவரை சகோதரர்! என்று கூப்பிடுவதிலேயே திருப்தி உண்டாகாது. 'காம்ரேட்' என்ற வார்த்தையிலிருந்து பாஷையின் பலம் தெரிகிறது போல மனத்திலும் ஒரு புதிய ஆவேசம் தெரிகிறது. ரஷ்யாவின் அவதியும் குழப்பமும் நிறைந்த தேசத்தின் நாகரீகமான "இன்குலாப் ஜிந்தாபாத்" கேட்க மனதிற்குப் பிடித்திருக்கிறது. இந்தியாவிலிருந்து அதற்குச் செலவு கொடுத்து அனுப்பிவிட்டால் என்ன நன்மை! கடிதங்களில் எங்கு முன்பெல்லாம் கடவுளின் பெயர் எழுதப்பட்டு வந்ததோ, அங்கிருந்து 'ஓம்' அல்லது "ஸ்ரீராம்" முதலியவற்றை யெடுத்துவிட்டு "இன்குலாப் ஜிந்தாபாத் எழுதுதல் இந்நாட்களில் நாகரீகமாய்ப் போய்விட்டது. ஆனால் வெள்ளம் சாஸ்வதமானதல்ல. நதியின் வெள்ளமாகட்டும் அல்லது எண்ணத்தின் வெள்ளமாகட்டும் நாளடைவில் அடங்கி விடுகிறது. வயலில் ஏருப்போட்டு அதைச் செழிப்பாக்கி உபயோகப் படுத்தப்படுகிறது. ஆனால் வீடு வாசலை இடித்துத் தள்ளி வசிப்போருக்குக் கஷ்டம் கொடுப்பதில்லை.

இன்று ரஷ்யாவின் ஜனசமூக வாழ்க்கையானது எப்படி தேசத்தை சந்தோஷப் படுத்தி வைத்திருக்கிறதோ, அதே போல நூறு வருஷங்களுக்கு முன் ஆங்கிலேயரின் மாயச் சேர்க்கையானது தேசத்தை மயக்கி வைத்தது. பிரிட்டனைப் பின் பற்றுதலே முன்னேற்றத்திற்கும் நாகரீகத்திற்கும் இலக்ஷணமாகக் கருதப் பட்டது. பிராமணர்களுக்கும், பண்டிதர்களுக்கும் சொல்லிச் சொல்லி அவர்களைக் கேலி செய்து கொண்டே பார்த்துக்கொள்வதும் எங்களுடைய ஆசாரம் அழிந்து என்று சொல்வதும் வழக்கமாக இருந்தது. அந்தச் சமயத்தில் இந்தியாவின் நாகரீகத்திற்கும், சமூகத்திற்கும் பெரிய அழிவு ஆரம்பித்திருக்கிறது என்ற கவலை உண்டாகியிருந்தது. கொஞ்ச நாட்களுக்குப்பிறகு, அந்த வெள்ளம் போய்விட்டது. ஆனால் அதனால் அழிவு மிகவும் அதிகமாக உண்டாயிற்று. அதன் பிறகு உத்தமசிஷ்யர்கள் அதைச்செப்பனிடுவதில் மிகவும் உழைத்தார்கள். விவேகானந்தர், ரவீந்திரர், காந்திஜீ முதலானவர்கள் இந்தியாவின் பழைய நாகரீகத்தைப் புனர் நியமனம் செய்ய மிகவும் முயற்சி செய்திருக்கிறார்கள். இதில் அவர்களுக்கு அதிகமான வெற்றி கிடைத்திருக்கிறது. இப்பொழுது அன்னியரைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றுவதில் வெட்கம் உண்டாகிறது; நம்முடைய நாகரீகத்திற்கு மரியாதை செய்ய நாம் அதிகமாகக் கற்றிருக்கிறோம்.

ரஷ்யாவின் நவீன அபிப்ராய வெள்ளமானது முதலில் மிகவும் ஆனந்தகரமானதாகத் தெரிகிறது. ஆனால் அதற்குள் உட்கார்ந்து பரீக்ஷை செய்த பிறகு நமக்கு அது முற்றிலும் அங்கீகரிக்க லாயக்கற்றது என்று தெரிந்து விடுகிறது. இன்றைய சமூகம் பல அழுக்குக்களால் நிரப்பப்பெற்றிருக்கிறது. ஆனால் அதைச் சுத்தப் படுத்துவதற்கு ரஷ்யாவின் முறை முற்றிலும் அவசிய மில்லை.

மீனினத்தில் பெரிய மீன்கள் சிறிய மீன்களைச் சாப்பிட்டு விடும் வழக்கமிருக்கிறது. மீன்கள் சிருஷ்டியின் ஆதிகாலத்திலிருந்தே அவ்வாறு செய்து வருகின்றன. இன்னும் செய்கின்றன. மனித சமூகத்தில் அப்பேர்ப்பட்ட இச்சை யுண்டாகும் பொழுது பின்ன பின்ன யுக்திகளினால் அவன் தன்னுடைய முறையை நடத்துகிறான். எல்லோருடைய நன்மைக்காகவும் என்றும் சொல்லப்படுகிறது. இங்கிலாந்து, இந்தியாவின் பேரில் ஆதிக்கம் செலுத்துகிறது. இத்தாலி அபிசீனியாவைத் தனது உணவாக்கிக்கொண்டது. ஜப்பான் சீனத்தை விழுங்கிவிட விரும்புகிறது. இவ்வளவு மட்டுமல்ல, ஆயுதத்தின் (தடியின்) உதவியால் தன்னுடைய காரியங்களைப் புகழும்படி செய்கிறது. ஆனால் மனிதனின் உள்ளே இருக்கும் நற்புத்தியானது அவைகளை அவமதித்துக் கொண்டே, 'இது மீனினத்தின் முறை, மீனின் காரியம், மனிதனின் காரியமில்லை' என்று சொல்லுகிறது. துஷ்ட ஜந்துக்களுக்குள் பெரியவை சிறியவற்றை விழுங்குதல், பல மிருந்தது பல மற்றதை வருத்துதல் நல்லதாயிருக்கட்டும். ஆனால் இது மனித சமூகத்திற்கு முற்றிலும் கூடாதது.

மனிதன் மற்ற ஜந்துக்களைவிட உயர்ந்தவன். அவனுடைய வாழ்க்கையும் உயர்வுடையது. ஆகையால் மீனினத்தின் முறையை அண்டாமல் விலக்க வேண்டும். ஆனால் அக்ரமக்காரர்கள் இதைக் கேட்பதில்லை. இதற்கு விரோதமாகக் கோபமடைகிறார்கள். மேலும் அடிக்கடி யுக்தி சொல்லிச் சொல்லி, 'இங்கிலாந்து இந்தியாவிற்கு அநேகம் நன்மைகள் செய்திருக்கிறது. இத்தாலி அபிசீனியாவுக்குப் பல நன்மைகள் செய்திருக்கிறது. ஜப்பான் சீனத்திற்கு உதவி செய்துகொண்டிருக்கிறது' என்றெல்லாம்சொல்லி விளக்கப் பார்க்கிறார்கள். அவர்கள் நன்றாக அவ்வாறே சொல்லட்டும். ஆனால் உலகத்தின் நல்லெண்ணமானது மீனின் முறையை விலக்கத் தான் சொல்லுகிறது. மீனின்முறை பழைய விஷயம். மீனின்முறை என்று சொல்லும்பொழுதே அது எப்பேர்ப்பட்ட பொருளென்று தெரிந்து கொள்ளுகிறோம்.

ஆனால் மீனின் முறையை நிந்திக்கக் கூடியவர்களே மிகுந்த மகிழ்ச்சியுடன் இன்னொரு முறையைப் பின்பற்றி அதை உபயோகத்திலும் கொண்டு வருகிறார்கள். இதுதான் தேனீ முறை.

தேனீ ஒரு கூட்டமாக ஒன்றுகச் சேர்ந்து வசிக்கின்றது. இதில் ராணி மாத்திரம் இருக்கும். ராணி எண்ணற்ற குழந்தைகளைப் பெறுகிறது. இக்குழந்தைகள்தான் ஈக்கூட்டத்தின் எல்லா வேலைகளையும் செய்கிறது. தேனீக் கூட்டத்தில் எல்லாம் சமம். இவைகளில் வேலை வித்தியாசத்தைத் தவிர பெரியவர் சிறியவரென்ற வித்தியாசம் கிடையாது. அங்கு கட்டறவுண்டு, ஆனால் கட்டப்பட்ட தனத்திற்கு யாரும் அதிகாரியில்லை. வீடு வாசல், பணம், பொருள் எல்லாம் சமூகத்தின் சொத்து. அவைகளின் குழந்தையை வளர்க்கத் தாதியுண்டு, அவைகளுக்குத் தாதியே உணவூட்டுகிறாள். உடம்பைச் சுத்தம் செய்கிறாள். அவைகளை அறிமுகப்படுத்துகிறாள். இன்ஜினியர் உண்டு, வீடு கட்டுபவனுண்டு. காப்பாற்றுபவன் கூட உண்டு, மேலும் காவல்காரனுமுண்டு. எல்லோருமுண்டு. எல்லோரும் நன்றாகச் சேர்ந்து வாழ்கிறார்கள். எத்தவிதமான எழுதப்பட்ட சட்டங்களும் கிடையாது. இருந்த போதிலும் இத்தக்கடினமான வேலைகள் சரியாக நடந்து கொண்டிருக்கின்றன. எல்லாம் சமூகத்திற்காக வேலை செய்கின்றன. எவ்வளவு அழகான முறை! மனிதனுடைய இருதயம் இதைப்பார்த்து உடனே மகிழ்ச்சியடைகிறது. மனித சமூகத்தில் அவ்வாறு நடந்தால் எவ்வளவு அழகாக இருக்கும்! இதில் எவனும் பணக்காரனல்ல, எவனும் ஏழையுமல்ல, சமூகம் தான் எல்லாம். மேலும் சமூகத்தின் நன்மைக்காக எல்லோரும் ஒரு மனத்துடன் ஒற்றுமையாக வேலை செய்துகொண்டே சுகமாக வாழ்க்கையை நடத்துகிறார்கள்.

இதுதான் ரஷ்யாவின் பெருமை. ரஷ்யா இதே முறையைத்தான் அடைய விரும்புகிறது. இதற்காகவே முயற்சி செய்து வருகிறது. ஆனால் இன்றுகூட அதற்கு அது கிடைக்கவில்லை. தனி மனிதனின் சொத்தை பெடுத்துக் கொள்ளுதலே ரஷ்யாவின் உயர்வு. ஆனால் அவ்வாறு முயற்சி செய்தும்கூட இதுவரையிலும் எடுத்துக்கொள்ள முடியவில்லை. ஏனென்றால் மனிதனுக்கு சொத்துரிமை யில்லையென்றால் சமூகத்திற்குள் உழைத்தல் சேர்த்தல் முதலிய வேலை நடக்காது; மேலும் உழைக்கவே மாட்டார்கள். சமூகம் பேசாதிருந்துவிடும். எல்லாக் குழந்தைகளையும் ஸ்டேட் அல்லது சமூகத்தின் சந்ததியாக்குவதற்கு விரும்பிக்கூட அவ்வாறு செய்ய முடியவில்லை.

தேனீ இனத்தில் கடவுளெண்ணம் போன்ற ஒரு பொருள் கிடையாது. தங்கள் தங்களுடைய இயற்கைக் குணத்தை அனுசரித்து வேலை செய்கிறது. ரஷ்யாவும் இதையே விரும்புகிறது. இருந்தபோதிலும் இன்றுகூட கடவுளை தேசத்திலிருந்து போக்கிவிட முடியவில்லை.

ரஷ்யாவின் கற்பனைச் சமூகத்துடன் தேனீச் சமூகத்தை ஒப்பிடல் இங்கேயே நின்று விடாது. இன்னும் கூட இதைவிடக் கம்பீரமான ஒரு ஒற்றுமையுண்டு. தேனீச் சமூகத்தில் ஒரு ராணி மாத்திரம் இருக்கிறது. அது தனியாக ராணியாயிருக்கிறது. அது வயோதிக மடைந்த பொழுது, தேனீச் சமூகம் அதை நீக்கி விட்டு இன்னொரு புதிய ராணியை வைக்க முயற்சிக்கிறது.

வயோதிக ராணி புதிய ராணியை ஏற்படுத்துவதில் முற்றிலும் தடை

(14-ம் பக்கம் பார்க்க)

நார்வேயில்தான் மிக வேடிக்கை. கிராமத்திலுள்ள எந்த ஏழைப்பெண் ணும் 'ஒரு நாள் இராணி'யாக ஆகி விடுகிருள்! கிரீடங்களும் நெக்லேஸ் களும் சர்ச்சுகளிலிருந்து இரவல் வாங் கப்படுகின்றன. அது அவள் திமண நாள்.

ஹங்கேரியிலுள்ள மணப்பெண் களும் கிரீடம் தரித்துக்கொள்வ துண்டு. ஒவ்வொரு மணப்பெண்ணும் ஒவ்வொன்றை வைத்துக்கொள்வாள்.

அர்மேனியத் தம்பதிகள் தங்க ஜரி கைகளைக்கொண்ட மாலைகள் வைத் திருப்பார்கள். புரோகிதர் மூன்று முறை மாலை மாற்றுவார். அம் மூன்று முறைகளிலும் மணமகன் மணமகள் தலையைத் தொடவேண்டும்.

காஸ்பியன் மணமகள் தலையில் தலைப் பாகை வைத்துக் கொண்டிருப்பாள். திருமண தினத்தன்று அவளுடைய கூந்தல் முழுதும் மொட்டையடிக்கப் படும்!

மலாய் நாட்டில் மணப் பெண்ணின் பற்களைக் கால் பங்கு அறத்தால் ராவி விடுவார்கள்.

பர்மாவில் மணப்பெண்ணின் காது களைத் துளைத்து விடுவார்கள். வலி தாங்கமாட்டாமல் போடுகிற சப் தத்தை வாத்தியக்கோஷங்கள் அடக்கி விடும்.

மூரிஷ் மணப்பெண்ணை ஒரு பெரிய பெட்டியில் வைத்து, வெள்ளைக் குதி ரையில் ஏற்றி, மணமகன் இல்லத் துக்கு அவளுடைய நீக்ரோ நர்சு அழைத்துச் செல்வாள்.

காகேஸியன் மணப்பெண், அடக் கமான ஆடைகளை உடுத்திக்கொண்டு, ஆடம்பரமான ஆடைகளுடனிருக்கும் வேலைக்காரிகளுடன் போவாள். கிரா மத்திலுள்ள ஒவ்வொரு வீட்டு வாச லிலும் நின்று, தான் ஏதேனும் குற் றம் செய்திருந்தால் தன்னை மன்னிக் கும்படி வேண்டிக்கொள்வாள்.

# விநோதமான திருமண முறைகள்

## உலகத்தில் வெவ்வேறு பழக்கவழக்கங்கள்

எஸ்கிமோ சாதியாரில், மணமகன் மணமகளைச் சிறுவயதிலேயே நிச்ச யம் செய்துவிடுவார்கள்.

ஜமேய்காவில் பெண்களுக்குத் தான் சகல உரிமைகளும் உண்டு. நிலம் பெண்களுக்கே சொந்தம். கண வரைப் பெண்களே தேர்ந்தெடுத்துக் கொள்வார்கள். கணவனை எப்போது பிடிக்கவில்லையோ அப்போது வேறொ ருவரைக் கலியாணம் செய்துகொண்டு விடுவார்கள்.

இங்கிலாந்தில் திருமணங்களுக் கென்று விசேஷமான 'கேக்குகள்' இருக்கின்றன. ஆனால் சில பகுதிகளில் விருந்துகள் வைத்தால் தாங்கள் சம்பந் தப்பட்டவரை மணந்துகொள்ள மறுப் பதாக அர்த்தம்!

ஜர்மேனியிலுள்ள துருங்கியக் காட் டில் ஒரு மாது ரஸம் அல்லது குழம்பு சேர்த்துப் பரிமாறினால் தனக்கு 'பிரிய மில்லை' என்று உணர்த்துவதாகக் கொள்ளப்படுகிறது.

அண்டலூசியாவில் பூசனிக்காய்ப் பதார்த்தத்தின்மூலம்தன் வெறுப்பைக் காட்டுவாள்.

போலந்தில் வாத்துக்கறியைச் சமைத்து விருந்தளித்தால் 'இஷ்ட மில்லை' யென்பதாக வைத்துக் கொள் ளப்படுகிறது.

யூதர் திருமண முறைப்படி 'ஒயின்' குடிப்பது வழக்கம். இந்த பானத்தை அருந்தினதும், பானமிருந்த கண்ணுடி டம்ளர் மணகன் காலடிக்கருகில் உடைக்கப்படும். மணமகன், மண மகள் ஆகிய இருவருடைய இரத்தத் தையும் சேர்த்துவைப்பதற்கு 'ஒயின்' அறிகுறியாகக் கருதப்படுகிறது.

ஜப்பானியத் தம்பதிகள் ஒரு பெரிய பீங்கான் கோப்பையிலிருந்து,இரண்டு குழாய்கள் வழியாக டீ குடிப்பார்கள். காகிதத்தால் செய்யப்பட்ட வண்ணத் திப் பூச்சிகள் அதில் கிடக்கும். அவை கள் இவர்களுக்குப் பிறக்கப்போகும் குழந்தைகளை ஞாபகமூட்டும்.

பிரிட்டனில் மணகன் மணமக ளுக்கு மோதிரந்தருவான். ஜப்பானில் மணமகன் தன் தங்கச் சங்கிலியை மணமகள் இடுப்பில் அணிந்துகொள்ள வும் வெண் பட்டை கவுனுக்கும் அனுப்புவான். சீனத்தில் வெண்பட்டுக் கயிற்றை இடுப்புக்காகவும், கை மணிக் கட்டுக்காகவும் அனுப்புவான். தவிர, சிவப்புக் காகிதத்தில் எழுதி மணமக ளைக் கூப்பிடுவான். திருமணங்களை ஏற்படுத்தத் தரகர்கள் இருக்கிறார்கள். ஜோஸ்யர்கள் தேதி குறிப்பார்கள். (இது இந்திய முறைக்குச் சிறிது ஒத்தி ருப்பதைக் காண்க.)

### நாய்களுக்குச் செலவு

ஐக்கிய அமெரிக்காவில் வருடந் தோறும் 30,00,000 நாய்களுக்கு லைசென்ஸ் வாங்கப்படுகிறது. இங்கு ஜனத்தொகை ஆண்கள், பெண்கள், சிறுவர், சிசுக்கள் உட்பட 4,50,00,000 பேர். ஆகவே ஒவ் வொரு 15 பேர்களுக்கும் ஒரு நாய் வீதம் இருந்து கொண்டிருக்கிறது. ஒவ்வொரு நாய்க்கும் வருஷத்துக்கு 8 பவுன் செலவாகிறது. ஆதலின், இந் நாட்டில் நாய்களுக்காக 2,50,00,000 பவுன் செலவாகிறது.

இவ்வளவு பெருந் தொகையைக் கொண்டு அமெரிக்கக் குடிசைகளை யெல்லாம் அபிவிருத்தி செய்யலாம் என்றுஒருவர்சொல்லுகிறார். 2½கோடி பவுன் காந்தியடிகள் கையிலிருந்தால் என்ன செய்வார்!

லண்டன் ரேடியோவில் பிப்ரவரி மாதம்முதல்ஞாயிற்றுக்கிழமை யன்று நாய்கள் பேசின! குலைத்தன!! மனிதர் கள் பேசினார்கள்; பாடினார்கள்!!

### யார் மிகக் கோடியவர்?

'குவீன்ஸ் ஒர்க்' எனும் ஒரு கத் தோலிக்கப் பத்திரிகை, தன் வாசகர் களிடையே ஒரு தேர்தல் நடத்தியது. 'யார் மிகச் செல்வாக்கிழந்தவர்கள்' என்பதை நிர்ணயிக்க அது நடந்தது. இதில் ஹிட்லர் தான் வெற்றி பெற் றார். அவர் எதிலுமே தோற்க மாட் டாரல்லவா?

இரண்டாவது ஸ்தானம் ஸ்டாலி னுக்கு! பிறகு ரூஸ்வெல்ட் மனைவி, பிராங்கோ, முசோலினி ஆகிய இரு வருக்கும் சமமான ஸ்தானந் தந்தி ருந்தார்கள்.

---





# உடையை மாற்றினதேன்? - - - - வெள்ளை நாகரிகம் பற்றினதேன்?

## தென்னுப்பிரிக்கக் காங்கிரசுக்குக் காந்தியடிகள் திட்டம்

['ஹரிஜன்' பத்திரிகையில் ஸ்ரீ பியாரிலால் வரைந்தது]

★

சமீபத்தில் தென்னுப்பிரிக்காவிலி ருந்து வந்த ஒரு பாதிரியார் காந்தி யடிகளைச் சந்தித்துப் பேசிக்கொண்டி ருந்தார். அவர் ஜோகான்ஸ்பர்க்கி லுள்ள டி. ஆர். மிஷனைச் சேர்ந்தவர். ரேவரேண்டு எஸ். எஸ். டீமா என்று பெயர்.

ரெவரெண்டு டீமா நீக்ரோ சாதி யைச் சேர்ந்தவர். ஆப்பிரிக்கக் காங் கிரஸில் ஓர் அங்கத்தினர். தம்முடைய இனத்தவரிடையே சமூக சீர்திருத்த விஷயங்களில் பாடுபட்டு வருகின்றார்.

தென் ஆப்ரிக்காவில் ஒரு கோடி நீக்ரோக்கள் இருக்கிறார்கள். வெள்ளை யர் 20 லட்சம், இந்தியர் 75,000.

உலகத்திலுள்ள, வெள்ளை நிறத் தவரல்லாத எல்லாச் சமூகங்களும் முற்போக்கடைந்து வருகின்றதைப் போலவே, நீக்ரோவர்களும் சமூக உணர்ச்சி பெற்று முன்னேறிச் செல் லுகின்றார்கள். இத்தாலி என்றைக்கு அபிஸீனியா தலையில் கையை வைத் ததோ, அன்றுமுதல் நீக்ரோவர்களு டைய சமூக உணர்ச்சி அதிகரிக்கத் தொடங்கிவிட்டது. வெள்ளையர் நாகரீ கம் நீக்ரோவரையுந் தாக்கிற்று; அத னால் ஒரு நீக்ரோகூட எத்தகைய பலி னும் அடையவில்லை.

கிறிஸ்துவப் பாதிரி பைபிள் புத்தகத் துடன் நீக்ரோவன் அருகில் சென்று பார்த்தார். ஆனால் அதில் சொல்லப் பட்டுள்ள கர்த்தரின் மலையுச்சி உப தேசம் அவனுக்கு முக்கியமானதாய்ப் படவில்லை. தன்னிடம் வெள்ளையர்கள் நடந்துகொள்ளுகிறமாதிரியையும்கர்த் தரின் உபதேசத்தையும் ஒப்பிட்டுப்பார் த்தான்; பைபிளில் சொல்லப்பட்டிருப் பது போல வெள்ளையர் தன்னிடம் நடக்கவில்லையெனக் கண் டான். இப்படி, பைபிளையும் பைபி ளைப் பின்பற்றும் வெள்ளையர்களு டைய நடத்தையையும் கண்டறிந்த நீக்ரோவர்களுடைய மனம் இன்னும் புழுங்கிற்று.

"ஒரு சாண் ஏறினால் ஒரு முழம் வழுக்குகிறது. எங்கள் தலைவிதி அப்படி. அதற்கு ஈவு மில்லை; இரக்கமுமில்லை. எங்களை ஆட்கொள்ளப்போவது யார்? நாங்கள் அதோகதி என்று நினைத்துக்கொண்டிருக்கிறோம்!"

என்று காந்தியடிகளிடம் பத்தாண்டு கட்கு முன்னால் சபர்மதியில் ஒரு நீக்ரோ நண்பர் 'அழுதார்'.

அதன்பிறகு, காங்கிரஸின் சாத்மீக திட்டத்தின் வெற்றியைக் கண்டு அவர்களுடைய தலைவர்களில் சில ருக்கு ஓரளவு சந்தோஷம் உண்டாகி யிருக்கிறது. ரெவரெண்டு டீமாவுக்கு இவ்வெற்றியின் இரகசியத்தை அறிய வேண்டுமென்று ஆவல். அவர்

'என்னுடைய மக்கள் தங்களு டைய காங்கிரசை இந்திய தேசீயக் காங்கிரசைப் போல வெற்றிகரமாக எப்படி ஆக்கிக்கொள்வது?' என்று கேட்டார்.

காந்தியடிகள் சொன்னார்:—

"அந்தக் காலத்திலிருந்த தன் னலமற்ற பெரியோர்களாலும் பல அறிஞர்களாலும் முதன்முத லாகக் காங்கிரஸ் ஆரம்பித்து வைக்கப்பட்டது. இந்த ஒரு கார ணத்தால்தான் காங்கிரஸ் அபி விருத்தியடைந்து வருகிறது. தங் களைத் தாங்களே மக்களுடைய பிரதிநிதிகளாய் கருதிக்கொண்டு தியாகத்தாலும் சேவையாலும் பொது மக்களுடைய மனதைக் கவர்ந்தார்கள். அவர்கள் பொது மக்களுடைய பிரதிநிதிகள். பொதுமக்களிடையே தோன் றின பிரதிநிதிகள்.

"வறுமையைச் சகித்துக் கொண்டு வறுமையிலேயே கிடந்து உழைக் கத்தக்க வகையில் போதுமான கூட் டம் ஆப்ரிக்கர்களாகிய உங்களி டையே கிடையாதென்று நினைக்கி றேன். படித்தவர்களுள் அந்தப் பூரண மான தன்னலமற்ற தன்மை இருக் காது. மேலும், உங்களுடைய தலை வர்களுள் பெரும்பான்மையோர் கிறிஸ்துவர்களா யிருந்தபோதிலும், பண்டு, ஜுலு சாதியார்களில் பெரும் பகுதியினர் கிறிஸ்துவர்களல்லர்.

"நீங்கள் ஐரோப்பிய உடைகளை யும் நடைகளையும் பின் பற்றியிருக் கிறீர்கள். இதனால், உங்கள் சொந்த மக்களுடைய மத்தியில் நீங்கள் அந் நியர்போல ஆகிவிட்டீர்கள். அரசி யலைப் பொறுத்தமட்டில் இது பாத கந்தான். இதெல்லாம் பாமர மக்க ளின் இருதயத்தில் புகமுடியாதபடி உங்களைச் சிரமப்படுத்தும்.

'பண்டு சாதியான் எனச் சொல் லுவார்களே என்று நீங்கள் பயப் படக்கூடாது. எதற்கும் வெட்கம டையக்கூடாது. பண்டுவும் சரி ஜுலுவும் சரி நல்ல உடற்கட்டுடன் இருக்கவேண்டும். தன் உடலை வெளியில் காட்ட வெட்கமடையக் கூடாது. அவன் உங்களைப்போல உடுப்பு உடுத்தவேண்டியதில்லை. நீங் கள் மீண்டும் ஆப்ரிக்கர்களாக ஆக வேண்டும்"

### வெள்ளையரல்லாதார் இயக்கம்

இந்திய ஆப்ரிக்கரைக் கொண்ட வெள்ளையரல்லாதார் இயக்கம் ஒன்றை ஸ்தாபிக்கப் போவதாக கொஞ்ச நாட் களாய்ப் பேச்சு நடந்து வருகிறது. இது சம்பந்தமாக காந்தியடிகளும் டீமாவும்பேசிக்கொண்டனர். "இதைப் பற்றி உங்கள் அபிப்பிராய மென்ன?" என்று கேட்டார் ரெவரெண்ட் டீமா.

"அது தவறு. அதன் மூலம் பலம் பெற மாட்டீர்கள். பலஹீனர்தான் அடைவீர்கள். ஒவ்வொருவரும் தன் கையே தனக்குதவி என்று இருந்து விட்டால், அதுவே மற்றவர்க்குப் பெரும் பயன் தரும். இரண்டு விஷ யங்களும் வெவ்வேறானவை. இந்தியர் கள் மிகச் சொற்பமான 'மைனாரிடி.' வெள்ளையர்களுக்கு அவர்களால் எவ் விதத் தீங்கும் ஏற்படாது. ஆனால், நீங்களோ அந்நாட்டு மக்கள். உங்கள் பரம்பரைப் பிறப்புரிமையை அழிக்கப் பார்க்கிறார்கள். இதை நீங்கள் பலங் கொண்டமட்டும் எதிர்த்துப்போராட லாம்; இது உங்கள் கடமை. உங்கள் பிரச்னை மிகப்பெரிது. இந்தியர் பிர ச்னையுடன் இதனைக் கலக்கக்கூடாது. என்றாலும், இந்த இரு சமூகத்தாரி டையே நேசப்பான்மை நிலவக்கூடா தென்று அர்த்தமல்ல. உங்களுடன் இந்தியர்கள் பல வழிகளிலே ஒத்து ழைக்கலாம்,உங்கட்குச்சாதகமாயுள்ள வற்றிலெல்லாம் அவர்கள் எப்போதும் துணையாய் நிற்கலாம். உங்களுடைய நியாயமான கோரிக்கைகட்கு அவர் கள் எதிராக இருக்கவேண்டியதில்லை.

ரேவ. டீமா: "இந்த இரு சமூகத்தா ரும் எத்தகைய தொடர்புகளை வைத் துக் கொள்ளலாம்?

காந்தியடிகள்: எவ்வளவு கூடுமோ அவ்வளவு நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கவேண்டும். ஆப்ரிக்கன், இந்தியன் என்கிற வித்தியாசத்தை நான் போக்கிவிட்டேன். எனினும் இவர்களிடையே புள்ள வித்தியாசத் தை நான் அறியாமல் இல்லை. மனித வர்க்கத்திலுள்ள பல்வேறு இனத்தாரும், ஒரு விருட்சத்தின் பல் வேறு கிளைகளைப் போன்றவர்கள். நாம் எதிலிருந்து முளைத்தோம் என் கிற மூலத்தை உணர்ந்துவிட்டால், விரோதத்துக்கு இடமில்லை.பாதகமான போட்டிகள் உண்டாகா.

ரேவ. டீமா: நமது மோட்ச நிலைக்கு பலாத்காரத்தைக் கையாளுவதா அல் லது சாத்மீகத்தைக் கையாளுவதா?

காந்தியடிகள்: எல்லாச் சந்தர்ப்பங் களிலும் சாத்மீகத்தைத்தான் கையா ளவேண்டும். ஆனால் வாஸ்தவமாகவே திடமான நம்பிக்கை உங்களுக்கு அதில் இருக்க வேண்டும். உங்களைச் சுற்றி காரிருள் சூழ்ந்திருந்த போதி லும் நீங்கள் நம்பிக்கையைக் கைவிட லாகாது. சாத்மீகத்தை நம்புகிறவர் கடவுளின் சத்திய நிலையில் நம்பிக்கை கொண்டிருக்கிறார். தோல்வி என்பது அவரிடம் இருக்கவே இருக்காது. ஆதலின் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் சாத்மீகத்தைத்தான் கடைப்பிடிக்க வேண்டும். ஆனால் அது தைரியசாலி கள் கொள்ளும் சாத்மீகமா யிருக்க வேண்டும். பயங்கொள்ளியின் சாத் மீகம் உதவாது.

ரேவ. டீமா: உங்கள் வாழ்க்கையின் உதாரணத்திலிருந்து நாங்கள் ஒன்றை நினைக்கிறோம் அதாவது, எதிர்காலத் தில் தலைவர்களாய் வருவார்கள் என நாங்கள் நம்புகிறவர்களில் இரண் டொருவரை உங்களிடம் பயிற்சிக்கு அனுப்ப வேண்டுமென்று நாங்கள் கருதி விட்டோம்.

காந்தியடிகள்: மிக நல்லயோசனை.

ரேவ. டீமா: கிறிஸ்துவ மதம் ஆப்ரிக் காவுக்கு விமோசனமளிக்கு மென்று நீங்கள் நினைக்கின்றீர்களா?

காந்தியடிகள்: இன்றைக்கு-எதைக் கிறிஸ்துவ மதம் என்று-சொல்லப்படு கிறதோ, எதைக் கிறிஸ்துவ மதம் என்று அனுஷ்டித்து வருகிறார்களோ அது உங்கள் மக்களுக்கு விமோசனம் அளிக்காது. தாமாகத் தங்களைக் கிறிஸ்துவர்கள் எனச் சொல்லிக் கொள்ளுகின்றவர்கள் ஏசுநாதரின் உண்மையான உபதேசத்தை அறியா தவர்கள் என்பது என் கருத்து. ஜுலு கலகத்தின்போது ஜுலுக்கள் மீது புரியப்பட்ட கொடுமைகளை நான் நே ரில் கண்டிருக்கிறேன். ஒரு தனிப் பட்ட பம்பாட்டா என்ற மனிதர் (இவர் அவர்களுடைய தலைவர்) வரி கொடுக்க மறுத்தாரென்று அச்சமூக முழுதுமே துன்புறுத்தப் பட்டது. நான் சிகிச்சைப் படையை நிர்வகித்து வந்தேன்.ஜுலுக்களின்முதுகை வெள் ளரியாக உரித்திருந்தார்கள். அவர்க ளெல்லாம் சிகிச்சைபெற எங்களிடம் வந்திருந்தனர். அவர்களுடைய புண் பட்ட முதுகை நான் மறக்கவே முடி யாது; அவர்களுக்கு வெள்ளை நர்சு கள் மருந்துபோட மறுத்துவிட்டார் களாம். இப்படிப்பட்ட கொடுமைக ளைச் செய்தவர்கள்கூட தம்மைக் கிறி ஸ்துவரென்று சொல்லிக்கொள்ளுகி றார்கள். அவர்கள் 'படித்தவர்கள்'. ஜுலுக்களைவிட 'டாப்பு சிறப்பான வே ஷ்டி சட்டை'க்காரர்கள். என்றாலும் ஆன்ம விஷயத்தில் அவர்களைவிட உய ர்ந்தவர்களல்லர்.

---

# 1939-40 சென்னை சர்க்கார் பட்ஜெட்

**நிலவரியில் தள்ளுபடி—வட ஆற்காட்டில் மது விலக்கு—பெட்ரோல் மின்சார வரிகள்—சாராயத்துக்கு அதிக வரி—ஹரிஜன அபிவிருத்தி—2 கோடி ரூபாய் நஷ்டம் இடான ஆச்சரியம். ஸி. ஆர். நிகழ்த்திய உருக்கமிக்க சொற்பெருக்கின் சாரம்.**

★

1939-40 ல் 16,23,45 வருமானம் கிடைக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. 1-10-39 முதல் வட ஆற்காடு ஜில்லாவில் மதுவிலக்கை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வருவதால் வருமானத்தில் குறையக்கூடிய தொகையை வருமானத்திலிருந்து குறைத்துக் கொள்ளப் பட்டிருக்கிறது. அந்த வருஷத்தில் 4 ஜில்லாக்களில், அதாவது சென்னை மாகாணத்தின் ஐந்தில் ஒரு பாகத்தில், மது விலக்கு முறை அனுஷ்டானத்திலிருந்து வரும். இதனால் 65 லட்சம் ரூபாய் வருமானத்தில் குறையும். மதுவிலக்கு முறை அனுஷ்டானத்திலில்லாத ஜில்லாக்களில் நாட்டுச் சாராய வரியை உயர்த்துவதன் மூலம் கிடைக்கக்கூடிய 10 லட்சம் ரூபாயும் கணக்கில் சேர்த்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. மின்சார வரி பெட்ரோல் வரி இவைகளின் மூலம் எதிர்பார்க்கும் 15, 12-ம் வருமானத்துடன் சேர்த்துக் கொள்ளப் பட்டிருக்கிறது. இந்த ஏற்பாடுகளை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வருவதற்கு வரவு செலவு திட்டத்தை ஆஜர் செய்த பிறகு சபையில் மசோதாக்கள் கொண்டுவரப்படும். வருமானக் கணக்கிலிருந்து 16,40,72 செலவு ஏற்படுமென்று எதிர் பார்க்கப்படுகிறது. வருஷா வருஷம் 3¾ லட்சம் ரூபாயும் ஆரம்பத்தில் 9¾ லட்சம் ரூபாயும் செலவு ஏற்படக்கூடிய புதிய செலவினங்களுக்கு வரவு செலவு திட்டத்தில் 9½ லட்சம் ரூபாய் பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

சபையில் ஆஜர் செய்துள்ள திட்டத்தில் 17.27 துண்டு விழுகிறது. புகையிலை விற்பனைக்கும், பொதுவாக சாமான்கள் விற்பனைக்கும் வரி விதிப்பதன் மூலமும் தமாஷா வரி விதிப்பதன் மூலமும் இந்தத் தொகையை ஈடு செய்து கொள்ள உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. வரவுசெலவு திட்டமான்யவிவாதம் முடிந்தபின் மார்ச்சு மாதத்தில் இவை சம்பந்தமாக மசோதாக்கள் கொண்டு வரப்படும்.

1939-40-ம் வருஷத்தில் மூலதனச் செலவினங்களுக்காக 91, 34 செலவு ஏற்படுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. இதில் 68. 73 லாபகரமான காரியங்களுக்காக உத்தேசிக்கப்பட்டது. விவசாயிகள் ஸ்தலஸ்தாபனங்கள் இதரர்கள் இவர்களுக்கு நீண்டகாலத் தவணைக்குக் கடன் கொடுப்பதற்காக 144, 49 வேண்டியிருக்குமென்று எசிர்பார்க்கப்படுகிறது. இதில் விவசாயிகள் கடன் நிவாரணத்திற்காக 75 லக்ஷம் உத்தேசிக்கப்பட்டுள்ளது. இதனுடன் மத்திய நில அடமான பாங்கிக்கு குறைந்தகால தவணைக்குக் கடன்கொடுக்க 75 லக்ஷம் ரூபாய் ஒதுக்கிவைக்கப் பட்டிருக்கிறது.

லாபகரமான மூலதன வேலைகளுக்காகவும் நீண்ட காலத் தவணைக் கடன்களுக்காகவும் எதிர்பார்க்கும் செலவு 2, 13, 32ல் 150 லட்சம் ரூபாயை அடுத்த வருஷம் கடனாக வாங்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. பாக்கித் தொகையை கவர்மெண்டின் இதர ஆதாய மூலங்களிலிருந்து ஈடு செய்யப்படும். இந்த வருஷத்தில் 5 கோடி ரூபாய்களுக்கு கஜானா உண்டியல்களை விற்று வாங்கவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

வருஷக் கடைசியில் துண்டு விழுந் தொகை 17, 27 ஐ கணக்கில் எடுத்துக்கொண்டும்; பஞ்சநிதி,மின்சாரநிதி கடன் பத்திரங்களின் மதிப்பை ஒதுக்கியும்; 43, 77 மிச்சமிருக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. புகையிலை விற்பனை, சாமான் விற்பனை வரிகள், தமாஷா வரி இவற்றை சட்ட சபைகள் அங்கீகரித்து துண்டு விழுந் தொகை அவை மூலம் ஈடாகிவிட்டால் அந்த வரிகளிலிருந்து கிடைக்கும் தொகைக்கும் தகுந்தபடி வருஷக் கடைசியில் மிச்சமும் கூடுதலாகவிருக்கும். இந்த வரிகளை அக்டோபர் மாதம் முதல்தேதி முதல் விதிப்பதால் 20 லட்சம் ரூபாய் வருமானம் கிடைக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

பஞ்சநிதி, மின்சார நிதி இவற்றில் ரொக்கமாகவும், கடன் பத்திரங்களாகவும் 31-3-40ல் 51, 31; 25, 78 முறையே இருக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

31-3-39ல் மூலதனப் பொறுப்புகளும் ஐவேஜிகளும் 19¼ கோடியாகவும் 32 கோடியாகவுமிருந்தது. 31-3-40ல் 20¾ கோடியாகவும் 33½ கோடியாகவும் உயரும்.

20—2—39 சென்னை அசெம்பிளியில் நிதி மந்திரி ஸ்ரீ ஸி. ராஜகோபாலாச்சாரியார், 1939-40ம் வருஷத்திய பட்ஜெட்டை சமர்ப்பித்தார்.

'இந்த வருஷம் நமக்குப் பெரிய சோதனைக் காலம். எந்த அம்சத்தில் பார்த்தாலும் சோதனைக் காலமே. நம்முடைய தேசபக்தி, தியாகம், நல்லெண்ணம், எல்லாம் இப்போது ரொம்ப அத்தியாவசியமானவை என்று ஸ்ரீ ஆச்சாரியார் கூறினர்.

ஸ்ரீ ஆச்சாரியார் செய்த பிரசங்கத்தின் சாராம்சம் பின்வருமாறு:

பொறுப்பற்ற மத்திய சர்க்கார், முக்கியமான எல்லா விஷயங்களிலும் சமஸ்தானங்களின் மீது குதிரை ஏறுவது வர வர அதிகமாய்விட்டது. பழைய பழக்கங்களை விட்டு விடுவதற்கு அவர்களுக்கு இஷ்டமில்லை, முடியவும் இல்லை. இந்த நிலைமை நீடித்துக் கொண்டுபோனால், மாகாண சர்க்கார்கள் தங்கள் சுயமதிப்புடன் நிர்வாகத்தை நடத்துவதென்பது அசாத்தியமான காரியம்.

## பொருளாதார நிலை

மூன்று ஜில்லாக்களில் கடுமையான பஞ்சம் ஏற்பட்டதையும், அனந்தபூர். கர்னூல் ஜில்லாக்களில் பஞ்ச நிவாரண வேலைகளுக்காக சர்க்கார் 25 லக்ஷம் செலவிட்டதையும் விஸ்தரித்தார், இந்த பிரதேசங்களில் 15 லக்ஷம் நில வரி வஜா செய்யப்பட்டு 4 லக்ஷம் கிஸ்தி வசூல் நிறுத்திவைக்கப்பட்டதென்றும் சொன்னார்.

சேலம், கிருஷ்ணா, மேற்கு கோதாவரி, விசாகப்பட்டினம் ஜில்லாக்களில் ஏற்பட்ட வெள்ளக் கஷ்டத்தையும், கிருஷ்ணா ஜில்லாவில் புயல் காற்றினால் ஏற்பட்ட பெருத்த சேதத்தையும்பற்றி நிதி மந்திரி குறிப்பிட்டார். இவ்வளவு கஷ்டங்கள் போதாதென்று, மாகாணம் பூராவிலும், வட கிழக்கு பருவ மழை தவறிவிட்டது. இதனால் சுமார் அரை கோடி நிலவரி வஜா செய்ய வேண்டியிருக்கும். மேலும் பர்மா கலகங்களினால் அங்கிருந்து வந்தவர்களின் உதவிக்காக சென்னை சர்க்கார் அரை லக்ஷம் ரூபாய்களுக்கு மேல் செலவிட்டிருக்கிறார்கள். விலைவாசிகளும் திருப்திகரமாயில்லை.

கடன் நிதாரண சட்டம் புரோநோட்டு கடன்களையும் கட்டுப்படுத்துமென்று சென்னை ஹைக் கோர்ட்டின் புல் பெஞ்சு தீர்ப்பளித்துவிட்டது. கடன் சமரச போர்டுகளும் ஸ்தாபிக்கப்பட்டுவிட்டன: இனிமேலாவது இந்தக் கடன் தொகை உபயோகித்துக் கொள்ளப்படு மென்று நம்புவோமாக. அடுத்த வருஷத்தில் விவசாயிகளுக்குக் கடன் கொடுப்பதற்கென்று 75 லக்ஷம் ஒதுக்கி வைக்கப்படும்.

## கையிருப்பு

1939மார்ச் 31உ கையிருப்பு 55·10 லக்ஷம். ரிசர்வ் பாங்கில் குறைந்த பக்ஷமாக டிபாஸிட் வைக்கவேண்டியதற்கும் கஜானக்களில் வைப்பதற்கும் தேவை 53 லட்சம். கையிருப்பு இதற்கதிகமாகவே இருக்கிறது. இது தவிர பஞ்சநிதி, சேதார நிதிகளில் செக்யூரிட்டிகள் இருக்கின்றன.

ஏற்றுக்கொள்ளும் புதுச்செலவுத் திட்டங்கள் 35-5 லக்ஷம். வரவு கழித்து இத்திட்டங்களில் பட்ஜெட்டில் சேரும் தொகை 22, 39 லக்ஷம்.

ஆகவே மொத்தம் தேவைப்படுவது 42,39 லக்ஷம் என்று சொல்லலாம்.

## மதுவிலக்கு

மதுவிலக்குத் திட்டம் இன்னும் ஒரு ஜில்லாவுக்கு விஸ்தரிக்கப்படுவதால் ஒரு முழு வருஷத்தில் 23 லக்ஷம் வருமானம் குறையும். 1939-40 பட்ஜெட்டில் குறைவது 13½ லக்ஷம்.

## புது வரிகள்

நான் ஏற்கனவே கூறியபடி வரவை விட செலவு 42-39 லட்சம் அதிகமாக இருப்பதில், ஏற்கனவே பிரசுரிக்கப் பட்ட மின்சார வரி பெட்ரோல் வரி மூலம் 15-12 லட்சம் கிடைக்கும்.

நாட்டுச் சாராயத்தின் மீதுள்ள வரி 1935ல் 25% குறைக்கப்பட்டது.

## சாராய வரி

இப்போது இந்த வரியை காலன் 1-க்கு 1-8-0 உயர்த்தப் போகிறோம். 35 டிக்ரி ப்ரூப் சாராயத்தின் மீது இந்த வரி போடப்படுகிறது. புது வரி உயர்வுக்குப் பிறகும் கூட இவ்வரி 1934-ல் இருந்ததைவிடக் குறைவு தான். மதுவிலக்குள்ள 4 ஜில்லாக்களில் இவ் வரி கிடையாது.

இவ்வரியால் கிடைப்பது 10 லக்ஷம். இவ்வாறாக, 42,39 லக்ஷத்தில் 25,12 லக்ஷம் ஈடு செய்யப்பட்டது போக, துண்டு விழுவது 17.27 லக்ஷம்.

அதாவது வருமானம் 1623. 45 லக்ஷம். செலவு 16,40,72 லக்ஷம். துண்டு விழுவது 17.27 லக்ஷம்.

## உத்தேசித்துள்ள புதிய வரிகள்

### புகையிலை வரி

17 லட்சம் என்பது பெரிய விஷயமில்லை யென்றாலும், 1940-41 ல் கலால் இலாகா வருமானம் மேற்கொண்டு குறையுமென்பதையும், மறந்துவிடக் கூடாது.

சர்க்கார் சில புதிய வரிகளை விதிக்கத் தீர்மானித்திருக்கிறார்கள். புகையிலை விற்பனை மீது வரி விதிக்க சர்க்கார் உத்தேசித்திருக்கிறார்கள்.

இந்தச் சுகானுபவப் பொருளை உபயோகிப்பவர்களைச் சொல்பமாக இது பாதிக்கும். புகையிலை வர்த்தகத்தையோ புகையிலை உற்பத்தியையோ இது பாதிக்காது. நாகரீகம் படைத்த நாடுகளிலெல்லாம் புகையிலைக்கு வரி இருக்கிறது.

### விற்பனை வரி

அடுத்தாற்போல் விற்பனை வரி ஒன்று விதிக்க உத்தேசித்திருக்கிறோம். ஒரு குறிப்பிட்ட தொகைக்குக் கீழ் வியாபாரம் நடக்கும் கடைக்காரர்களுக்கு விலக்கு கொடுக்கப்படும்.

பத்தாயிரம் ரூபாயிலிருந்து, நாற்பதாயிரம் வரையில், வருஷாந்தர வியாபாரம் செய்யும் கடைகள், அல்லது கம்பெனிகளுக்கு மொத்தமாக ஒரு வரி விதிக்கப்படும். வியாபாரம் ரூ. 40 ஆயிரத்துக்குமேல் இருந்தால் அவர்கள் சர்க்காருக்கு ரூபாய்க்கு ஒருதம்பிடி வீதம் வரி கொடுக்க வேண்டும்.

இந்த பொது விற்பனை வரிதான் மிகவும் முக்கியமான வரி இனமென்று சர்க்கார் கருதுகிறார்கள்.

பெட்ரோல், மின்சார வரிகள், நல்ல பொருளாதார நிலைமையிலிருப்பவர்களைத்தான் பாதிக்கும். புகையிலை வரி, விற்பனை வரி இரண்டும் சொல்பமாகத்தான் இருக்கும். இப்போது பெரிய வர்த்தகங்களிலிருந்து மாகாண சர்க்கார்களுக்கு ஒன்றுமே வருமானம் கிடையாது.

சர்க்காரின் மதுவிலக்கு கொள்கையால், ஜனங்களின் செலவிடும் சக்தி, வருஷத்திற்கு 15 கோடிக்கு மேல் அதிகமாகும். இதனால் வர்த்தகம் விருத்தியாகும்.

இந்தியா சம்பந்தப்பட்ட வரையில் பூர்ண மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டுவருவதற்கு வருமான நஷ்டத்தைத்தவிர வேறொரு தடையும் இல்லை.

மாகாணங்களுக்கு சுதந்தரம்கொடுத்திருக்கிறார்கள். வரி விதிக்கும் வசதிகளோ ரொம்ப சொல்பம். இதற்கு பல கட்டுப்பாடுகள் இருக்கின்றன.

ஆகையால், முடிவில் மத்திய சர்க்கார் தங்கள் செலவுகளைக் குறைத்துக் கொண்டு, மாகாணங்களுக்கு அதிக பணம் கொடுத்தால்தான் பணக் கஷ்டம் இல்லாமல் மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டுவரலாம். ஆனால் அப்படி ஏற்படும் வரையில் நாம் உட்கார்ந்து கொண்டிருக்க முடியாது. அதற்கிடையே நாம் வரி விதிக்க வேண்டும்.

### தமாஷ் வரி

சென்னை மாகாணம் பூராவுக்கும் தமாஷ் வரி விதிக்கும் யோசனையும் இருக்கிறது. இதுவும் சீக்கிரத்தில் வரும், இப்பொழுது இந்த வரி ஸ்தலஸ்தாபனங்களால் விதிக்கப்படுகின்றன. சர்க்காரே இனி இந்த வரியை வசூலிப்பார்கள். ஆனால், ஸ்தலஸ்தாபனங்களுக்கும் மொத்தமாக ஒரு தொகை கொடுக்கப்பட்டுவிடும்.

(9-ம் பக்கம் 4-ம் பத்தி பார்க்க)





## இராயவரம்

### பாரதி வாலிபர் சங்க ஆண்டுவிழா

24-2-38 வெள்ளிக்கிழமை காலை, மாலை இரு வேளைகளிலும் இவ்வூர் நீலாஞ்சனடாக்கீஸ் சினிமா தியேட்டரில் புதுக்கோட்டை மகாராஜா கல்லூரித் தமிழ்ப்பண்டித வித்வான் ஸ்ரீ நா. கனகராஜய்யர் தலைமையில் சங்கத்தின் முதலாவதாண்டு விழா நடைபெறும். பல அறிஞர்கள் சொற்பொழிவாற்றுவார்கள்.

### நிகழ்ச்சி முறை

**24-2-39** வெள்ளிக்கிழமை காலை 9-மணி முதல் பகல் 12-மணி வரை.

1. தலைவர் வரவேற்பு. 2. இறை வணக்கம். 3. வரவேற்பு இதழ் வாசித்தளித்தல். 4. அறிக்கை படித்தல். 5. தலைவர் முன்னுரை. 6. கைத்தொழில் என்பதுபற்றி (ஸ்ரீ கே.இராஜகோபாலய்யங்கார், பி. ஏ. பி. எல். புதுக்கோட்டை)

பிற்பகல் 2-மணி முதல்:—

7. 'இந்திய வாலிபர் கடமை' (ஸ்ரீ. டாக்டர் K. R. ரெத்னசாமி M. B. B.S. காரைக்குடி) 8. 'மணவாழ்க்கை' (ஸ்ரீ சோம.வீரப்பா நேமுத்துப்பட்டி) 9. 'சங்கத்தின் அவசியம்' (ஸ்ரீ எஸ். அழகப்பா)10 தலைவர் கருத்துரைத்தல் 11. வந்தனோபசாரம் (காரியதரிசி) 12. வாழ்த்து.

## குமார ராஜா சென்னை பிரயாணம்

செட்டியார்கள் சங்கத்தார் உபசாரம்

17—2—39 புறப்பட்ட சிலோன் போட் மெயிலில் செட்டிநாடு குமார ராஜா முத்தையாச் செட்டியார் சென்னைக்குப் பிரயாணமானார். அவர்களை வழியனுப்பும்பொருட்டு இலங்கை நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்கத்தவர்கள் கோட்டை ரயில்வே ஸ்டேஷனில் குழுமியிருந்தனர். சங்கத் தலைவர் திரு வி. கரு. சித. மெய்யப்ப செட்டியார் குமாரராஜாவுக்கு மலர் மாலை அணிவித்து மகிழ்ச்சி தெரிவித்தார்.

## காளையார்கோவில்

### ஆரம்ப ஆசிரியர் சங்கம்

மேற்படி சங்கத்தின் மாதாந்திரக் கூட்டம் 11—2—39 தேதி சிவகெங்கை ரேஞ்சு ஸ்ரீ டிப்டி இன்ஸ்பெக்டரவரின் தலைமையில் காலை 10 மணிக்குக் கூடியது.

போர்டு ஸ்கூல் உபாத்தியாயர்களுக்கு இன்கிரிமெண்டு சாங்கிஷன் செய்யுமாறு இராமனாதபுரம் ஜில்லாப் போர்டு பிரசிடெண்டைக் கேட்டுக் கொள்வதாக ஏகமனதாக தீர்மானிக்கப்பட்டது.

11—3—39 தேதி சங்கத்தின் வருஷாந்திர விழா கொண்டாடுவதாகவும் அதற்கென ஒரு சப் கமிட்டியும் நியமிக்கப்பட்டது.

## நேமத்தான்பட்டி

### கிராமக் காங்கிரஸ் கமிட்டி

நேமத்தான்பட்டி கிராம காங்கிரஸ் கமிட்டி நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் 16—2—39 மாலை 4 மணிக்கு கமிட்டித் தலைவர் திரு. ச. சுப்பிரமணிய தேசிகர் தலைமையில் கூட்டம் ஆரம்பமாகியது. காரியதரிசி திரு. பழ. கிருஷ்ணன் சொந்த வேலையை முன்னிட்டு நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர் பதவியையும் காரியதரிசி பதவியையும் ராஜினமச் செய்வதாக வந்த கடிதம் படிக்கப்பெற்று நீண்ட விவாதத்திற்குப் பின் ஒப்புக்கொள்ளப் பெற்றது.

காலியான ஸ்தானத்திற்கு திரு. சோம.வீரப்பா ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றது. காரியதரிசி பதவிக்கு திரு. சோம. வீரப்பாவை திரு: சு. ஆண்டியப்பா பிரேரேபிக்கவும், திரு. எஸ். தங்கவேல் ஆமோதிக்க ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றது.

## கொத்தமங்கலம்

### நிர்வாகஸ்தர் தேர்தல்

17—2—39 காலை 10 மணிக்கு தலைவர் அரு. சி. சின்னையா செட்டியார் தலைமையில் ராமநாராயணன் சவுக்கையில் கொத்தமங்கலம் காங்கிரஸ் அங்கத்தினர்களின் பொதுக் கூட்டம் நடைபெற்றது. 1939-ம் வருஷத்திற்கு கிராம காங்கிரஸ் சபைக்கு புதிய நிர்வாகஸ்தர்கள் தெரிந்தெடுக்கப்பட்டார்கள்.

தலைவர்: திரு. டாக்டர் பி. எஸ். சுவாமினதய்யர்; உப-தலைவர்: சா. வீர. சாத்தையா அம்பலம்; காரியதரிசி, பொக்கிஷதார்: ராம நாராயணன்; உப-காரியதரிசி: ஆ. உ. அ. சின்னையா அம்பலம்.

### அங்கத்தினர்கள்

திருவாளர்கள் நா. அரு. அருணசலம் செட்டியார், அரு. சி. சின்னையா செட்டியார், சொ. அண. அண்ணமலை செட்டியார், ப. சி. கா. செல்லப்ப செட்டியார், லெ. அருணசலன், ராம. ராமனுதன், கே. கோதண்டராமய்யர், சிவ. உ. உலகப்பன், கா. பி. ராம. செல்லையா, அம்பலம், கா. உ. மு. முத்தையா அம்பலம், என். ராமசுப்பு.

கீழ்க்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன.

(1) காங்கிரஸ் அங்கத்தினர்கள் அனைவரும் கதர் கட்டவேண்டியது அவசியமென்றும், நிர்வாகஸ்தர்கள் கட்டாயமாக கதர் கட்டவேண்டுமென்றும், தீர்மானிப்பதுடன் அகில பாரத சர்க்கா சங்க அத்தாட்சிபெற்ற கதரையே உபயோகிக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளுகிறது.

(2) உள்ளூர் ஹரிஜனங்கள் வசிக்கும் இடத்தில் ஒரு கேணி வெட்டிக் கொடுப்பதற்கு கமிட்டி நிதியிலிருந்து ரூ. 50 வரை கொடுப்பதென்றும்,

## நாட்டரசன்கோட்டை

### கிராமக் காங்கிரஸ் கமிட்டி

12-2-39 ஞாயிற்றுக்கிழமை மாலை நாட்டரசன்கோட்டை கிராமக் காங்கிரஸ் கமிட்டியின் காரியாலத்தில் ஸ்ரீ ஆவி. கண. செ. அடைக்கப்பச் செட்டியார் தலைமையில் நடைபெற்ற மாதாந்திரக் கூட்டத்தில், திரிபுராவில் நடக்கும் இந்தியத் தேசீய காங்கிரசுக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸ், தமிழ்நாடு மாகாண காங்கிரஸ் கமிட்டியின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட, ஸ்ரீ ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார், இணைக்கப்பட்ட ராமனதபுரம் ஜில்லாப் போர்டின் உப-தலைவர் ஸ்தானத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட பாகனேரி ஸ்ரீ உடையப்பா இவர்களைப் பாராட்டித் தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன.

அதைக் கவனிப்பதற்கு கமிட்டி அங்கத்தினர்களான திருவாளர்கள் லெ. அருணசலன், ஆ. உ. அ. சின்னையா அம்பலம் இருவரையும் நியமித்திருக்கிறது.

(3) உள்ளூர் ஹரிஜனங்களுக்கு நமது கிராம காங்கிரஸ் சபையின் சார்பில் "தினமணி" வரவழைத்துக் கொடுப்பதென்று தீர்மானிக்கிறது.

(4) பொதுஜன நலன் கருதி ஏழை மக்களின்நன்மையைமுதன்மையாகக் கவனித்து நமது ஊருக்கு சமீபத்தி லுள்ளதும் இரவு நேரங்களில் தங்குவதற்கு வசதியானதும் போக்குவரத்து சாதனங்கள் அதிகமாயுள்ளதுமான நேமத்தான்பட்டியில் ஒரு ரயில் நிலையம் ஏற்படுத்தித்தருமாறு அதைச் சேர்ந்த அதிகாரிகளைக் கேட்டுக்கொள்கிறது.

(5) சமஸ்த்தான பிரஜைகள் தங்கள் உரிமைக்காக "அஹிம்சை" முறையில் தீவிரமாக போராடுவதை பாராட்டுகிறது.

(6) காங்கிரஸ் அங்கத்தினர்களிடம் வசூலிக்கும் சந்தா தொகையிலிருந்து கிராமக் கமிட்டிகள் அடைந்து வரும் ஈவு அணு ஒன்றை எந்தவிதக் காரணத்தைக் கொண்டும் குறைக்கக் கூடாதென்றும்; சர்க்கிள் கமிட்டிகள் ஏற்பட்டால் தாலுகா, ஜில்லா, மாகாண கமிட்டிகளின் ஈவுத் தொகைகளிலிருந்தே சர்க்கிள் கமிட்டி நிர்வாகம் நடத்தப்பட வேண்டுமென்றும், மாகாண காங்கிரஸ் கமிட்டியைக் கேட்டுக் கொள்ளுகிறது.

### இளைஞர் பொதுநலக் கழகம்

15—2—39உ திரு. சி. ராம. ராமராமசாமி செட்டியாரவர்கள் சவுக்கையில் நடந்த நிர்வாகசபைக் கூட்டத்தின் தீர்மானங்களாவன:

திரிபுரா காங்கிரஸ் வெற்றியுடன் நடக்கும்படியும், கஸ்தூரிபாய்காந்தி, மணிபன் படேல், சேத்பஜாஜ் ஆகியோர்களை சிறைப்படுத்திய கவர்ன்மெண்டை இக் கழகம் கண்டிப்பதாயும் தீர்மானித்தது.

## தேவகோட்டை

### ஹிந்துஸ்தான் சாரணர் சங்கம்

ஹிந்துஸ்தான் சாரணர் சங்கத்தின் முதலாவது ஆண்டுவிழா 15—2—39 மாலை இவ்வூர் நகரத்தார் ஹாலில், மதுரை வழக்கறிஞர் உயர்திரு எல். கிருஷ்ணசாமி பாரதி எம். எல். ஏ. தலைமையில் நடைபெற்றது. கடவுள் வணக்கத்திற்குப்பின், அறிக்கை வாசிக்கப்பட்டது. இந்நகர் முனிசிபல் கமிஷனர் ஸ்ரீமான் ஜனப் அப்துல் ஹமீத் 'சேவையின் அவசியம்' பற்றியும், ஸ்ரீமான் கரு. கி. சொர்ணநாதன் செட்டியார் 'சங்கத்தின் நலன்' கருதியும் சொற்பொழிவாற்றினர்கள்.

தலைவர் முடிவுரைக்குப்பின் சில பயிற்சிகளும், தீவட்டமும் நடத்திக் காண்பிக்கப்பட்டது.

### சரஸ்வதி வாசகசாலை

13—2—39 மாலை ஸ்ரீ கே. ஆர். மாணிக்கம் தலைமையில் மு. அ. சுப்பிரமண்யம் "நமது கடமை" என்பது பற்றியும், சுவாமி அருணசலன் "விதவா விவாகம்" என்பது பற்றியும், வி. இராமனுதன் "மகாகவிபாரதி" என்பதுபற்றியும் சோம. திருநாவுக்கரசு "நட்பு" என்பதுபற்றியும் சொற்பெருக்காற்றினர்கள்.



பொங்குபுகழ்ப் பாரதத்தாய் பொருந்தமணி முடிபுனைந்து புலவர் போற்றச்
சிங்கஅணை மீதிருந்து தனியரசு செலுத்தியுயர் செங்கோல் தாங்கி
எங்குமொளி வீசஆறம் யாவுநனி வளர்ந்தோங்க இடொன் றில்லா
எங்கள்தமிழ் இனியநறும் மணம்மலர ஊழியமே ஏற்றிட் டேஞல்

வெகுதானிய-ஹு மாசி-மீ 12-உ (23—2—39) வியாழன்

## மாகாண வரவு செலவு திட்டம்

நமது சென்னை மாகாணத்தின் **1939, 40**-ம் வருட வரவு செலவு திட்டம் தயாரிக்கப்பெற்று 20உ கூடிய ஜனப்பிரதிநிதி சபையில் பிரதம மந்திரி கனம் இராஜகோபாலாச்சாரியாரால் சமர்ப்பிக்கப்பட்டது. அத்திட்டப்படி 1939—40-ம் ஆண்டின் மொத்த வருமானம் 16, 23, 45, 000. பதினறு கோடியே இருபத்து மூன்று லட்சத்தி நாற்பத்தையாயிரம்; எதிர் பார்க்கப்படும் செலவு 16,40,72,000. பதினறு கோடியே நாற்பது லட்சத்தி எழுபத்திரண்டாயிரம். எனவே எதிர்நோக்கும் வரவைவிட எதிர்பார்க்கும் செலவு 17,27,000. பதினேழு லட்சத்தி இருபத்தேழாயிரம். அதிகச் செலவுக்குத் திட்டம் வகுத்து பட்ஜெட் தயாரித்தது தவறு என்று சொல்லி விடுதற்கு இல்லை.

துண்டு விழாத நிலைமையில் திட்டம் வகுப்பது நல்லதே. அது பெரும்பாலாக முடிவதில்லை. செலவினங்கள் குறைவுபடா நிலைமையில் எப்பொழுதும் தயாராக இருக்கின்றன. வரவு அருகப் பல சந்தர்ப்பங்கள் நேர்கின்றன. சிலவகைச் செலவை எந்தக் காரணத்தைக்கொண்டும் தவிர்க்கமுடியாமல் மாகாண அரசாங்கம் செய்து தீரவேண்டிய நிர்ப்பந்தத்தில் இருக்கின்றது. பெருந் தொகைகளாக மிகப் பல உத்தியோகஸ்தர் பெறும் சம்பளங்களைக் குறைக்க மாகாணத்தை ஆளும் பொறுப்பேற்றவர்க்கு அதிகாரம் இல்லை. வேறு எது எப்படியாஹும் அத்தகைய செலவினங்கட்கு முதலில் வருமானம் தேடியாக வேண்டும். மாகாண ஆட்சிமுறையில் இதற்குப் பரிகாரம் வைக்கப்பெற்றிருந்தால் மேல்வரி இல்லாமலேயே வரவு செலவு திட்டம் எளிதில் வகுக்கப்படமுடியும்.

மந்திரிகள் வாங்கும் சம்பளத்தை விட அவர்கள் கீழ் வேலை செய்வோர் பலமடங்கு அதிகச் சம்பளம் வாங்குவது ஓர் அதிசயமான முறையல்லவா? அதை அளவுப்படுத்த மந்திரிகளால் முடியவில்லை. எப்படியாவது வருமானம் வந்தால் சரியென்று காங்கிரஸ் மந்திரிசபை கருதவில்லை. தீய வழியில் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு அரசாங்கத்தை நடாத்திச் செல்லக் காங்கிரஸ் மந்திரி சபை விரும்பவில்லை. அதோடு, ஏழை மக்கட்கும் விவசாயிகட்கும் எதிர்பாராத விதமாக இன்னலுற்றோர்க்கும் உதவி செய்யவும் காங்கிரஸ் மந்திரிசபை தயங்கவில்லை. இந்நிலையில் பதினறு கோடி ரூபாய்க்கு மேற்பட்ட வரவு செலவில் பதினேழு லெட்சத்துச் சொச்சம் துண்டு விழும்படி வகுத்த திட்டம் தவருனதென்ருே, தாங்க முடிந்த சில இனத்தின் மீது சிறிது வரி விதித்தது பிசகு என்ருே சொல்வதற்கில்லை.

காங்கிரஸ் அரசாங்கம் ஏற்பட்ட பிறகு மதுவிலக்குக் கொள்கை காரணமாகச் சென்னை மாகாணத்தில் குறைந்து போன வருஷ வருமானம் கொஞ்சமல்ல. இப்போது மதுவிலக்குக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஜில்லாக்கள் நான்கு. அவை சேலம், கடப்பை, சித்தூர், வட ஆற்காடு என்பன. இந்த நான்கு ஜில்லாக்களும் சேர்ந்து நிலப்பரப்பில் மாகாணத்தில் ஐந்தில் ஒரு பகுதி யென்ற கணக்கைப் பிரதம மந்திரி சபையில் அறிவுறுத்தினர். எனவே மாகாணத்தில் ஐந்தில் ஒரு பங்கு நிலத்தில் வாழ்வோர், கட்குடி யென்னும் கொடுமையினின்றும் விடுவிக்க வழி செய்யப் பெற்றிருக்கின்றனர். இவ்வகையில் இந்த நான்கு ஜில்லாக்களிலும் மாகாண அரசாங்கம் வருஷம் ஒன்றுக்கு 65 லட்ச ரூபாய் வருமானத்தை இழக்கின்றது. இந்தப் பெருந் தொகையை மக்கள் நல்வாழ்வு ஒன்று கருதியே அரசாங்கம் இழக்க முன் வந்திருக்கிறது.

மாகாண முழுமையுமே இம் மதுவிலக்கைக் கைக்கொள்ள வேண்டுவதே. அது வெற்றி பெறுமா என்ற சந்தேகம் இனி இராது. திடீரென்று ஒன்ருக எங்கும் கைக்கொள்ளத் தொடங்கினல், வருஷம் ஒன்றுக்கு அப்படியே நான்கு கோடிக்கு மேற்பட்ட வருமானத்தை—மாகாண மொத்த வருமானத்தில் நான்கில் ஒரு பகுதியை, இழந்து திணறி, மாகாண அரசாங்கம் ஸ்தம்பித்து, நிலை குலைந்து விடக்கூடும் என்றே பொக்கிஷ மந்திரி கனம் இராஜகோபாலாச்சாரியார் பெரிதும் அஞ்சுகிருர். அதுபற்றி அவர் பட்ஜெட் சொற்பெருக்கில் பகரும் உரைகளைக் காரணத்தோடு மறுப்பதற்கில்லை. சிறிது சிறிதாகச் செய்து நாளடைவில் முழு மதுவிலக்கை மாகாணத்தில் நாட்டிவிட முடியுமென அவர் நம்புவது நியாயமேயாகும். ஆனல் இரண்டு, ஒன்று என்ற அளவில் இல்லாமல், அடுத்த ஆண்டிலாவது அதிகமான ஜில்லாக்கள் மதுவிலக்குக்கு எடுக்கப்பட வேண்டுவது அவசியம். அதற்குள் எந்த ராஜா எந்தப் பட்டமோ என்று நினைக்கிறீர்களா?

இத்திட்டத்தில் பெட்ரோல் மீதும் மின்சாரத்தின்மேலும் சில புதியவரிகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. அதில் 15 லட்சம் வருமானம். சாராயவரி கூட்டப்பட்டிருக்கிறது. அதன்மூலம் எதிர்பார்க்கப்படும் வருமானம் சுமார் 10 லட்சம். இந்த இருபத்தைந்து லட்சம் கழித்தே பதினேழு லட்சம் அதிகச் செலவாகிறது. இதை ஈடு செய்ய இடைக்காலத்தில்—அதாவது வருஷத்தின் பிற்பகுதியில் புகையிலை விற்பனையின் மேல் ஒரு வரியும் குறிப்பிட்ட ஒரு பெருந்தொகைக்குமேல் வியாபாரம் செய்யும் வியாபாரிகட்கு ஒரு வரியும் விதிக்க உத்தேசமிருப்பதாக நிதி மந்திரி கூறுகிருர். இவைகளை யெல்லாம் கேட்டு ஏது வரி மயமாக இருக்கிறதே என்று நினைக்கிறீர்களா? ஒரு வரும்படியை விட்டால், செலவையும் குறைக்க அதிகார மில்லாத நிலையில்—இன்னெரு வரும்படியைத் தேடாமல் எப்படி ஈடு செய்து நிர்வாகத்தை நடாத்தமுடியும்?

தாங்க முடியாதவர் தலையில் பாரத்தை ஏற்றிவைப்பது அறிவுடைமை யாகாது. சுமக்கும் ஆற்றல் வாய்ந்தவர் கொஞ்சம் சிரமப்பட்டுத்தான் ஆகவேண்டும் என்றல் சுமக்கத் தானே வேண்டும், அநேகமாகத் தராதரம் அறிவதில் கனம் ராஜகோபாலாச்சாரியார் தவறமாட்டார். 39, 40 வரவு செலவுத் திட்டம் நல்ல முறையிலேயே அமைந்திருக்கின்றது.

## இடி முழக்கம்

**தேவகோட்டை சப் கோர்ட்**

தேவகோட்டை சப் கோர்ட்டில் வழக்குகள் அதிகமாக இருந்த காரணத்தை யொட்டி சுமார் 12 ஆண்டுகட்கு முன் உதவி சப் ஜட்ஜ் ஒருவர் நியமிக்கப் பெற்றார். அந்த ஸ்தானம் சில நாட்களுக்கு முன் அரசாங்கத்தாரால் எடுக்கப்பட்டு விட்டது. தேவைக்கு அதிகமாக இருக்கும் ஜட்ஜிகளை எடுத்து விடுவதோ, தேவையற்ற இடத்திலிருக்கும் கோர்ட்டுகளை மூடி விடுவதோ நியாயமேயாகும். தேவகோட்டை சப் கோர்ட்டுக்கு வரும் வழக்குகளை நடாத்த ஒரு நீதிபதி போதும் என்றிருந்தால் மற்றெரு ஜட்ஜ் ஸ்தானத்தை யெடுத்தது சரியே. நிலைமை யப்படியில்லை. ஜட்ஜ் ஸ்தானம் எடுக்கப்பட்டு ஏராளமாக தேவகோட்டைக் கோர்ட் சம்பந்தப்பட்ட வழக்குகள் சிவகங்கைக்கும் மதுரைக்கும் மாற்றப்பட்டிருக்கின்றன. சமீபத்தில் நடந்த கோர்ட்டை விட்டு நீண்ட தூரத்துக்குப் போய் அதிகச் செலவையும் பல அசவுகரியத்தையும் பொதுஜனங்கள் ஏற்றுக் கொள்ளச் செய்தல் பொருந்தாதது. வர வர வசதி செய்து கொடுக்கும் நாகரிக உலகில் இருக்கும் வசதியைப் போக்குவது விரும்பத் தக்கதல்ல. இம்மாற்றத்தை இப்பகுதியிலுள்ள பொதுஜனங்கள் விரும்பவில்லை. எனவே இதனைக் கவனித்துச் சென்னை அரசாங்கச் சட்ட மந்திரி தக்கது செய்வார் என்று நம்புகிறோம். கோர்ட்டுகள் தேவகோட்டையிலிருப்பதை விடக் காரைக்குடியில் இருந்தால் இப்பகுதிக் கோர்ட் தோழர்கள் எல்லோர்க்கும் மிகவும் சுலபமாக இருக்கும் என்பது கட்சிக்காரர் பலருடைய கருத்து என அறிகிறோம்.

**புதிய டில்லி**

புதிய டில்லி, சமஸ்தானச் சேட்டைகளைப் பார்த்து ரஸித்துக்கொண்டிருக்கிறது. இந்திய நிலைமை பற்றி மிகுந்த பீதியுடன் லண்டனுக்கு அவ்வப்போது தெரிவிக்கின்றது போலும்.

**அலகாபாத்**

அலகாபாத், வார்தாவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றது. அலகாபாதும் வார்தாவும் விரைவில் திரிபுராவில் சந்திக்கும். திரிபுராவிலிருந்து இந்தியாவுக்கு உத்திரவு பிறக்கலாம். அதற்கு முன்னரேயும் பிறக்கலாம். இப்போதே பிறந்துவிட்டதாக நேரு உள்பட பலதலைவர்கள் கருதுகிருர்கள்.

**வார்தா**

வங்காளச் சிங்கமாம் ராஷ்ட்ரபதி ஸ்ரீ சுபாஷ் சந்திரபோஸ் வார்தாவிலுள்ள சிவக்கிராமத்துக்குள் புகுந்தார். காந்தியடிகளுடன் 3 மணி நேர சம்பாஷணை நிகழ்ந்தது. அடிகள் நன்கு உபசரித்துப் பேசியதால், ஸ்ரீ போஸ் புன்சிரிப்புடன் வெளியேறினர். வெளியேறும்போது ஒரு பெண்மணி வந்து பழங்கள் புசித்துவிட்டுப் போகுமாறு அழைத்தார். காந்தியடிகள் 'தேநீர்' குடிக்கச் சொன்னர். சிவக்கிராமத்தில் தேநீர் இருக்காதென்று நினைத்து ஸ்ரீ போஸ் அடிகள் கூறியதை விளையாட்டென்று கருதினர். காரியக்கமிட்டி 21ம் தேதி கூடியபின்னர் தாம் தலைவர் தேர்தல் தகராறுபற்றி அறிவிப்பதாய்க்கூறினர். தம் சொந்தத் திட்டப்படிக் காங்கிரசை நடாத்திக்கொள்ளுமாறு அடிகள் சொல்லிவிட்டார். காரியக்கமிட்டியிலுள்ள தம் சகபாடிகள் காரியக்கமிட்டி அமைப்பிலோ அல்லது அடுத்த வருஷக் காங்கிரஸ் அலுவல்முறைத் திட்டத்திலோ மும்முரமாயிருக்க மாட்டார்களென்றும் அறிவித்துவிட்டார். பிரதிநிதிகள் தம் போக்கைப் புறக்கணித்து விட்டபடியால் இனித் தாம் யோசனைகூறப்போவதில்லை யென்றும் திட்டமாய்ச் சொல்லிவிட்டார்.

**காந்தியடிகள்**

'தீவிரவாதிகள்' எனப்படும் அவசரவாதிகளுக்கு இச் சந்தர்ப்பத்தைத் தந்துவிடப்போவதாயும், அவர்கள் வெற்றியுடன் நடத்தினல் காந்தியடிகள் மிக மகிழ்ச்சி கொள்வாரென்றும் 'மிதவாதிகள்' எனப்படும் காரியவாதிகள் கூறுகின்ருர்கள். எனவே, இவர்கள் ஸ்ரீ சுபாஷ்சந்திரர் கையில் 'எப்போது ஒப்படைப்போம்' என்று தீவிரமாய் நிற்கிருர்கள்!

**ஸ்ரீ போஸ்**

ஸ்ரீ சுபாஷ் சந்திரருக்கு உடல் நலமில்லை. 103 டிக்ரி ஜுரம். நீண்ட ஓய்வு எடுத்துக்கொள்ளவேண்டுமென டாக்டர்கள் கூறுகின்றனர். ஆதலின் 21ம் தேதி வார்தா காரியக் கமிட்டி கூட்டத்துக்குவரமுடியவில்லை. மற்றவர்கள் வந்துள்ளனர்.



## காரைக்குடி நகரசபை

காரைக்குடி நகரசபையின் சாதாரணக் கூட்டமொன்று வரும் 25–2–39 சனிக்கிழமை மாலை 3-மணிக்கு நடைபெறும்.

### சுகாதார சிசுவாரம்

காரைக்குடி முனிசிபாலிடியில் தேசிய சுகாதார சிசுவாரக் கொண்டாட்டத்தை நடத்துவதற்கு தலைவரும், காரியதரிசிகளும், அங்கத்தினர்களும் தெரிந்தெடுப்பதற்கு பிப்ரவரி 25உ சனிக்கிழமை மாலை 5-மணிக்கு நகரசபை மண்டபத்தில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெறும்.

### காரைக்குடி குப. மெ. முனிஸிபல் பார்க் தீப விழா

21–2–39 மாலை 6 மணிக்கு இந்நகர் தெற்குத் தெருவிலுள்ள மேற்படி பார்க்கில் ஸ்ரீ சா. அழகப்பா நன்கொடையில் அமைத்திருக்கும் 'மெர்க்குரி க்ரீன் லைட்'டையும், ஸ்ரீ சா. அரு. மெ. மெய்யப்ப செட்டியார் நன்கொடையில் அமைத்திருக்கும் 'ரேடியோ'வையும் ஸ்ரீ மெ. செ. ச. சிதம்பரம் செட்டியார் ஆரம்பித்து வைத்தார். நகரசபை கமிஷனர், பார்க் சம்பந்தமான அறிக்கையைப் படித்து முடித்ததும், ஸ்ரீ ராம. சிதம்பரம், பொதுமக்களின் சார்பாக நன்றி தெரிவித்தார். ஸ்ரீ சா. அழகப்பா பார்க் ஏற்பட்ட வரலாற்றைப்பற்றிப் பேசினர். முனிஸிபல் வைஸ்-சேர்மென் ஸ்ரீ லெ. மெய்யப்பனம்பலம் நகரசபையின் சார்பாக நன்றி கூறினர்.

### பிரிவு உபசார விருந்து

காரைக்குடி பாரதி படையின் சார்பில் ஸ்ரீசா. அழகப்பன் அயல்நாடு செல்லுவதை முன்னிட்டு ஒரு பிரிவுஉபசார விருந்து இராமகிருஷ்ண விவேகானந்தர் சங்கத்தில் 20–2–39 திங்கட்கிழமை மாலை 5 மணிக்கு கமிஷனர் ஸ்ரீ புருஷோத்தம் தலைமையில் நடைபெற்றது. டாக்டர் ரத்தினசாமி ஸ்ரீ சா. கணேசன் முதலியோர் பேசினர்.

### கம்பர்பற்றி ஸ்ரீ டி. கே. ஸி

20–2–39 மாலை காரைக்குடி எஸ். எம். எஸ். ஹைஸ்கூல் கட்டிடத்தில், நகரசபை சேர்மன் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் தலைமையில் ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் 'கம்பர்' என்பது பற்றி ஓர் அரிய சொற்பெருக்கு நிகழ்த்தினர். இதன் முழு விபரம் அடுத்த வாரத்தில் வரும்.

## டென்மார்க் மகாநாட்டுக்கு ஸ்ரீ ஏ. கே. செட்டியார்

### பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்கப் பிரதிநிதி

டென்மார்க்கிலுள்ள காப்பன்ஹேகனில் வரும் ஜூன் மாதத்தில் நடக்கவிருக்கும் சர்வதேச வர்த்தக மகாநாட்டுக்கு, பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டிமார்கள் சங்கப் பிரதிநிதியாக, டாகுமெண்டரி பிலிம்சைச் சேர்ந்த ஸ்ரீ ஏ. கே. செட்டியார் செல்வார்.

ஸ்ரீ ஏ. கே. செட்டியார் 3–3–39-ம் தேதி எரின்பூரா கப்பலில் இரங்கூன் போகிருர்.

## சென்னை மாகாண சர்க்கார் வரவு செலவு திட்டம்.

[கீழே கொடுக்கப்பட்டிருக்கும் தொகைகள் ஆயிரக்கணக்கில்]

### ஏ. வருமானக் கணக்கில் வரவு செலவு

| | 1937—38 கணக்குப்படி | 1938—39 திட்டப்படி | 1938—39 திருத்திய திட்டப்படி | 1939—40 திட்டம் |
|---|---|---|---|---|
| (1) வருமானம் ... | 16,00,62 | 15,98,21 | 16 23,19 | 16,23,45 |
| (2) செலவு ... | 15,82,96 | 15,98,09 | 16,20,76 | 16,407,2 |
| உபரி அல்லது துண்டு விழும் தொகை | 17,66 | 12 | - 2,43 | —17,27 |

### பி. வருமானமல்லாத கணக்கு

| | | | | |
|---|---|---|---|---|
| (1) வரவு (மார்க்கெட்டில் வாங்கிய கடன்) | 1,64,03 | 1,75,00 | 1,51,29 | 1,50,00 |
| [—தொகையானது பட்டுவாடாவுக்கு அதிகமான வரவைக் காட்டுகிறது] | | | | |
| 2) செலவு | | | | |
| (ஏ) மூலதனச்செலவு ... | 1,37,53 | 1,34.26 | 1,43,45 | 91,34 |
| (பி) ஸ்தல ஸ்தாபனங்கள் முதலியவற்றிற்குக் கடன் (நிகரம்) | 23,08 | 82,98 | 79,01 | 1,16,74 |
| (ஸி) டிபாஸிட் கணக்கு (நிகரம்) ... | 9,96 | 3,19 | 13,03 | —64,02 |
| | 1,70,57 | 2,20,43 | 2,35,49 | 1,44,06 |
| (3) வரவுக்கு அதிகமாக பட்டுவாடா ... | 6,54 | 45,43 | 84,20 | —5,94 |

### ஸி. மிச்சம்

| | | | | |
|---|---|---|---|---|
| (1) ஆரம்ப இருப்பு ... | 1,25,75 | 1,09,88 | 1,36,87 | 55,10 |
| (2) கடைசியில்இருப்பு ... | 1,36,87 | 64,57 | 55,10 | 43,77 |

### டி. மூலதனப் பொறுப்பும் ஐவேஜிகளும்

| | 31—3—38.ல் | 31—3—39.ல் திருத்திய திட்டப்படி | 31—3—40.ல் வரவு செலவு திட்டப்படி |
|---|---|---|---|
| (1) பொறுப்புகள் | | | |
| (ஏ) வட்டியுள்ளவை | 12,93,55 | 14,54,55 | 16,23,17 |
| (பி) வட்டியில்லாதவை | 5,31,74 | 4,67,93 | 4,65,96 |
| மொத்தப் பொறுப்பு | **18,25,29** | **19,22,48** | **20,89,13** |
| (2) ஐவேஜிகள் | | | |
| (ஏ) வருமானந்தருபவை லாபகரமானவை ... | 23,31,49 | 25,28,21 | 27,15,04 |
| லாபகரமில்லாதவை ... | 4,64,94 | 4,65,36 | 4,66,25 |
| (பி) இதர ஐவேஜிகள் (சென்னை பஞ்சநிவாரண நிதியிலும் மின்சார திட்ட ரிசர்வ் நிதியிலும் உள்ளவை உள்பட) ... | 85,70 | 1,12,26 | 1,34,87 |
| (ஸி) ரொக்கப் பாக்கியைப் போட்டு வைத்திருக்கும் கணக்கிலுள்ள பத்திரங்கள் ... | 79,72 | 42,55 | ... |
| (டி) ரொக்கக் கையிருப்பு | 1,36,87 | 55,10 | 43,77 |
| மொத்த ஐவேஜிகள் | **30,98,72** | **32,03,48** | **33,59,93** |
| (3) பொருப்பைக் காட்டிலும் அதிகப்படியாக வுள்ள ஐவேஜி ... | 12,73,43 | 12,81,00 | 12,70,60 |

### இ. பஞ்ச நிவாரண நிதி

| | 1937—38 கணக்குப்படி | 1938—39 திருத்திய திட்டப்படி | 1939—40 திட்டப்படி |
|---|---|---|---|
| (1) ஆரம்ப இருப்பு ... | 59,96 | 64,54 | 45,57 |
| (2) கடைசி இருப்பு ... | 64,54 | 45,57 | 51,31 |

### எப். மின்சார திட்ட ரிசர்வ் நிதிகள்

| | | | |
|---|---|---|---|
| (1) ஆரம்ப இருப்பு ... | ... | 5,73 | 14,80 |
| (2) கடைசி இருப்பு ... | 5,73 | 14,80 | 25.78 |

## 1939-40

| முக்கியமான வரவு இனங்கள் | | முக்கியமான செலவு இனங்கள் | |
|---|---|---|---|
| வருமான வரி | 24,15,000 | நிலவரி | 25,39,500 |
| நிலவரி | 4,99,57;300 | கலால் | 30,86,200 |
| கலால் | 3,55,03,700 | ஸ்டாம்பு | 4,94,800 |
| ஸ்டாம்பு | 1,67,27,600 | காட்டிலாகா | 39,73,600 |
| காட்டிலாகா | 44,66,400 | ரெஜிஸ்டிரேஷன் | 29,58,300 |
| ரெஜிஸ்டிரேஷன் | 31,74,100 | மோட்டார் இலாகா | 73,63,300 |
| மோட்டார் லைசென்ஸ் | 82,91,300 | நீர்ப்பாசனம் | 1,28,97,900 |
| இதர வரிகள் | 18,34,400 | நிர்வாக இலாகா | 2,84,33,000 |
| நீர்ப்பாசனம் | 2,05 13,200 | நீதி | 92,53,000 |
| வட்டி | 23,03,400 | ஜெயில் | 23,35,900 |
| நீதி இலாகா | 17,19,900 | போலீஸ் | 1,61,85,400 |
| ஜெயில் | 5,82,700 | கல்வி | 2,64,57,300 |
| போலீஸ் | 6,82,100 | வைத்தியம் | 97,47,800 |
| கல்வி | 7,59,500 | சுகாதாரம் | 29,00,400 |
| வைத்தியம் | 10,45,400 | விவசாயம் | 21,12,900 |
| சுகாதாரம் | 2,83,500 | கைத்தொழில் | 26,83,400 |
| கைத்தொழில் | 18,35,100 | மின்சாரம் | 1,60,01,800 |
| மின்சாரம் | 61,58,800 | | |

(6-ம் பக்கத் தொடர்ச்சி)

இந்த வரி மசோதாக்கள் சீக்கிரம் நிறைவேற்றப்பட்டு, ஜனங்களும் ஒத்துழைத்தால், இப்போது துண்டு விழும் 17-27 லட்சத்தை வருஷ முடிவுக்குள்ளாகவே சமாளித்து விடலாம்."

நிர்வாகச் செலவை கூடியவரை அகனம் செய்திருக்கிறோம். 1938ல் புதிய சம்பள விகிதங்கள் அமுலுக்கு வந்தன. நாங்கள் பதவிக்கு வருமுன் ஏற்பட்ட சம்பள விகிதங்களுக்கு இந்திய அரசியல் சட்டத்தின் மூலம் அளிக்கப்பட்டுள்ள பல பாதுகாப்புகளிருப்பதாலும் புதிய திட்டம் புதிய ஆட்களைமட்டும் கட்டுப்படுத்துவதாலும் நிர்வாகச் செலவு அதிகமாகக் குறையவில்லை. எனவே படிப்படியாகத்தான் இதன் பலன்கள் அதிகரித்துக்கொண்டே போகும்.

### சம்பள வெட்டு

"ஒரு குறிப்பிட்ட குறைந்த பக்ஷ தொகைக்குமேல் இருக்கும் எல்லா சம்பளங்களுக்கும் (1938 திட்டத்தினல் பாதிக்கப்படாதவைக்கு மட்டுமே) ஒரு சொல்ப சம்பள வெட்டை ஏற்படுத்துவதுபற்றி யோசித்து வருகிறோம். இது தாற்காலிகமான வெட்டாக இருக்கும். சென்ற சில வருஷங்களின் கால நிலைமையும், நம்முடைய பண நிலைமையையும் உத்தேசித்தே இது செய்யப்படுகிறது. இந்திய மந்திரியின் அதிகார வரம்புக்கு உட்பட்டவர்களையும் அதே சம்பள வெட்டுக்கு உட்படுத்துவதற்காக இந்திய மந்திரிக்கு எழுதியிருக்கிறோம்.

### மூலதனச் செலவுகள்

1939-40ல் மூலதனச் செலவுகள் 91.34 லக்ஷமாயிருக்கும். அதில் 68.73 லக்ஷம் வருமான இனங்களுக்காகக் கடன் வாங்கிச் செலவழிக்கப்படும். 22.61 லக்ஷம் பல சில்லரை வேலைகளுக்கும் பென்ஷனை மொத்தமாய் வாங்கும் உரிமையை இன்னம் பெற்றுள்ளவர்களுக்கும் செலவழிக்கப்படும். இது வரிப்பணச் செலவாயிருக்கும்.

### விவசாயிகளுக்குக் கடன் வசதி

ஸ்தல ஸ்தாபனங்களுக்கும் விவசாயக் கடன் நிவாரணத்துக்கும் 219.49 லக்ஷம் ஒதுக்கப்படுகிறது. இதில் ரூ. 75 லக்ஷம் நில அடமான பாங்குக்கு குறுகிய காலக் கடனாக தரப்படுகிறது. இதில் 90% இவ்வருஷத்துக்குள் வசூலாய்விடும். மிச்சத்தில் ரூ. 75 லக்ஷம், விவசாயிகளுக்கு சர்க்காரே நேரடியாக, குறைக்கப்படும் கடன்களைத் தீர்ப்பதற்குத் தருவார்கள். அடுத்த வருஷம் இந்தவசதி பூர்ணமாய் பயன்படுத்திக்கொள்ளப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

### ரொக்க வசதிகள்

அடுத்த வருஷம் மொத்தம் ரூ. 160 லட்சம் கடன் வாங்கவேண்டியிருக்கும். இதை எவ்வாறு பெறுவது என்பது பிறகு முடிவு செய்யப்படும். ரூ. 5 கோடிக்கு கஜானு உண்டியல்களை வெளியிட்டு வருஷக் கடைசிக்குள் அவற்றை மீட்டு விடலாம்.

## பெட்ரோல் விற்பனை வரி

சென்னை, பிப். 21—

பெட்ரோல் விற்பனைபேரில் காலன் ஒன்றுக்கு 1½ அணு வரி விதிக்க சென்னை சர்க்கார் உத்தேசித்திருப்பது பற்றி சர்க்காருக்கு தென்னிந்திய வர்த்தகர் சங்கம் விடுத்த நிருபத்தில் பெட்ரோல் ஆடம்பர சாமான் அல்லவென்றும் வரியை காலன் ஒன்றுக்கு ஓரணுவாக குறைக்க வேண்டுமென்றும் வரி வசூல் ஏற்பாடு குறைந்த செலவு பிடிப்பதாகவிருக்க வேண்டுமென்றும் வற்புறுத்துகிறது.

## வாக்காளர் உரிமை

### காரைக்குடி கமிஷனர் அறிவிப்பு

மாகாண சட்டசபைகளுக்குரிய வாக்காளர்களின் ஜாபிதா தயாரிக்கப்படுவதற்கான விதிகளின்படி, ஓர் முனிஸிபாலிடியின் விஸ்தீரணத்திற்குள் வசிப்போர்கள், அம் முனிஸிபாலிடிக்குச் செலுத்தவேண்டிய வரிகளை, ஷைஜாபிதா தயாரிக்கப்படும் வருடத்தின் மார்ச்சு மாதம் 31௳க்குள்ளாக செலுத்தியிருந்தாலொழிய, வோட்டுரிமையை இழந்துவிடுவார்கள். மாகாண சட்ட சபைக்குரிய வாக்காளர்கள் ஜாபிதாவே முனிஸிபல் வாக்காளர்கள் ஜாபிதாக்களாக பிரசுரிக்கப்பட வேண்டியவையாகையால், வரி பாக்கியுள்ளோர் முனிஸிபல் வோட்டர்களாகவும் ஆகமாட்டார்கள். ஆகவே முனிஸிபல் வரி விதிக்கப்பட்டவர்கள் தங்களுடைய வோட்டுரிமையைக் காப்பாற்றிக்கொள்ளும் பொருட்டு நாளது 1939-ம் வருஷம மார்ச்சுமீ 31௳க்குள் முனிஸிபல் வரிகள் எல்லாவற்றையும் செலுத்திவிட வேண்டுமாய் எச்சரிக்கப் படுகிறார்கள்.

## நெற்குப்பை

### பஞ்சாயத்து போர்டு எதிரிகள் வழக்கு தள்ளுபடி

நெற்குப்பை பஞ்சாயத்து போர்டினால் 1931—32 முதல் 37—38 வரை விதித்து வரப்பெற்ற தொழில் வரி சரியான விளம்பரத்தின் மீது விதிக்கப்படவில்லை என்றும் வசூல் செய்யப்பட்ட தொகைகளைத் திருப்பித்தரும்படியும் போர்டின் மீது, முத்து. க. லெ. இராமனுதன் செட்டியார், பழ. பெரி. பழ. வயிரவன் செட்டியார், மு. ராம. மு. மு. நடராஜன் செட்டியார், ஷையார் தம்பி தியாகராஜன் செட்டியார் மைனர் மாணிக்கஞ் செட்டியார், பழ. பெரி. பெரி. பெரியணன் செட்டியார் ஆகிய அறுவரால் சிவகங்கை டி. மு. கோர்ட்டில் தொடரப்பெற்றிருந்த வழக்குகளை, சரியான விளம்பரத்தின் மீதே தொழில் வரி விதிக்கப்பட்டிருக்கிறது என்றும் காரணம் கூறி, போர்டுக்கு செலவு தொகை கொடுக்கும்படி 14—2—39-ல் முன்சீப் டிஸ்மிஸ் செய்துவிட்டார். இதுபோன்ற சில வழக்குகள் முன் போர்டுக்குப் பிரதிகூலமாகி, அதனால் பல கஷ்டமடையநேர்ந்ததென்பதைக் குறிப்பிடாமலிருக்க முடியாதென ஸ்ரீ அழ. விஸ்வநாதன் தெரிவிக்கிறார்.

### கோவானூரில் கொடியேற்றுவிழா

18-2-39௳ சனிக்கிழமை சிவகங்கைத்தாலூகா கோவானூரில் ஷையூர் கிராம காங்கிரஸ் கமிட்டியினுதரவில் கொடியேற்றுவிழா சிறப்பாக நடந்தேறியது. காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் காரியதரிசி ஸ்ரீமான் கரு முத்து சிவலிக்கம் கொடி யேற்றிவைத்து நீண்டதோர் பிரசங்கம் செய்தார். சிவகெங்கைத் தாலூகா கா. கமிட்டி மெம்பர் ஸ்ரீ கா. வெ. சேதுராமச் சந்திரனும் பேசினர்.

## இலங்கை

### நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்கம்

இலங்கை நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்கத்தில் பொதுக்கூட்டமொன்று 16—2—39 மாலே மேற்படி சங்கக்காரியாலயத்தில்நடைபெற்றது. கூட்டத்திற்கு குமாரராஜா முத்தையா செட்டியார் தலைமை வகித்தார். ஆரம்பத்தில் குமாரராஜாவைத் தலைமை வகிக்கும்படி சங்கத் தலைவர், திரு வி கரு. சித. மெய்யப்ப செட்டியார் கேட்டுக்கொண்டார். கரகோஷத்தினிடையே குமார ராஜாவுக்கு மலர் மாலை அணிவிக்கப்பெற்றதும், தலைவர் தமது முன்னுரைப் பிரசங்கத்தை நிகழ்த்தினர். தலைமை தாங்கிய குமார ராஜாமுன்னுரையாகப் பேசியபோது பின் வருமாறு கூறினர்.

சிலோன் நாட்டுக்கோட்டைச் செட்டியார்சள் சங்கம், 12 வருடங்களுக்குமுன்னர் ஆரம்பமாகியது. அது ஆரம்பமான காலத்தில் வருமான வரி மசோதா விஷயத்தில் பாராட்டத்தக்க சில நன்மைகளை உண்டுபண்ணியது. பின்னர் இடைக்காலத்தில் சற்று ஊக்கம் குன்றியிருந்து, தற்போது புத்துயிர் பெற்றிருப்பதைக் காண மகிழ்ச்சியடைகின்றேன். அடிக்கடி சர்க்காரில் தோன்றும், சட்டதிட்டங்களை பரிசிலனை செய்து, அவற்றால் ஏற்படும் கஷ்டங்களை நிவர்த்திசெய்து நம்மைப் பாதுகாத்துக் கொள்வதற்கு சங்கம் இன்றியமையாத சாதனமாகும். அத்துடன் நகரசபைகளிலும், ஸ்தல ஸ்தாபனங்களிலும் நமது சங்கத்தினருக்கென ஸ்தானங்களிருக்கவேண்டும். அவ்விதமிருந்தால் தான் தம்மைப் பாதிக்கத்தக்க விஷயங்கள் அமுல் நடத்தப்படாமல் நம் கட்சியை எடுத்துக் கூறி நம்மை பாதுகாத்துக்கொள்ள முடியும். இது விஷயத்தில் நாம் எடுத்துக்கொண்ட முயற்சியின் பயனுகவே திரு. சுப்பையாச் செட்டியார் கொழும்பு நகரசபை அங்கதினராகி, இன்று இந் நகரின் டிப்டி மேயராகவும் தெரிவு செய்யப்பட்டிருக்கிறார். சங்கத்திற்கு வேண்டிய நிதியைத் திரட்டி அதை நன்னிலைப்படுத்தினால் அதன் மூலம் நம் பாதுகாப்புக்கான சாதனங்களைத் தேடிக்கொள்ளலாம்.

அடுத்தபடியாக திருவாளர்கள் செ. ராம. வள்ளியப்பசெட்டியாரும், நகரசபையின் உதவிமேயர் எம். சுப்பையா செட்டியாரும், சங்கக் காரியதரிசி பெ. பெரி. சுப்ரமணியஞ் செட்டியாரும், இலங்கைவாழ் இந்தியர்களுக்கு ஏற்படும் இன்னல்களையும் இப்பொழுது இலங்கைச் சர்க்காரால் ஏற்படுத்தவிருக்கும் ஷாப்புச்சட்டம், நகை அடகுச்சட்டம் போன்ற கடுமையான சட்ட அமுலால் இந்திய வர்த்தகர்களுக்கு நேரும் பேராபத்துக்களையும் விரிவாக விளக்கி இனி இந்தியர்களெல்லாம் தமது நலங்களைப் பாதுகாக்கப் பொது ஸ்தாபனங்கள் மூலம் போராடி வெற்றி பெறவேண்டுமென்றும் கூறினர்கள்.

பிறகு காரியதரிசி பெ. பெரி. சுப்பிரமணியஞ் செட்டியார் இலங்கையிலுள்ள இந்திய ஏஜண்டின் காரியாலயத்தை (தற்போது கண்டியிலிருக்கிறது) கொழும்புக்கு மாற்ற வேண்டுமென இந்திய சர்க்காரை கேட்பதுபற்றிய ஓர் தீர்மானத்தை பிரரேபித்து சபையோரால் அங்கீகரிக்கப் பெற்று தீர்மானமாகியது.

பின்னர் தலைவர் விரிவாக முடிவுரை நல்கியதும் சங்கத்தின் சார்பாக அனைவர்க்கும் திரு. ராம. சி. மெ. கதிரேசனுல் நன்றியுறை வழங்கப்பட்டு கூட்டம் இரவு 7 மணிக்கு முடிவெய்தியது.

## காளையார்கோவில்

### பெற்றோர்கள் சங்கம்

ஷைசங்கத்தின் மாதாந்திரக் கூட்டம் ஸ்ரீ சிவ. கண. சிவஞானமூர்த்தி தலைமையில் ஸ்ரீ ராமகிருஷ்ண வாசக சாலை கட்டிடத்தில் இரவு கூடியது. அவ்வமயம் கீழ்க்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேறின.

தீர்மானம்: ராமநாதபுரம் ஜில்லா போர்டுக்கு பாகனேரி ஸ்ரீ உடையப்பா உப-தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதை இச்சங்கம் ஆதரிப்பதுடன் இப்பகுதியிலுள்ள பள்ளிக்கூடங்களுக்கு வேண்டும் கோரிக்கைகளை நிறைவேற்றிக் கொடுக்கவேண்டுமென்று கோருகிறது.

இவ்வூரிலுள்ள போர்டு ஆண் பாடசாலை ஏற்பட்டு சுமார் 42 வருஷங்களுக்கு மேலாகிறது. இவ்வூரைச் சுற்றி சுமார் 8 மைல் விஸ்தீரணத்துக்குள் ஹையர் எலிமெண்டரி பாடசாலை இல்லை. தவிர காளையார்கோவில் போர்டு ஆண் பாடசாலையில் பள்ளி மாணவர்களின் சங்கை சென்ற 8 மாத காலத்திற்குள் 'இரட்டித்து இருக்கிறது. சிவகெங்கை ரேஞ்சு பள்ளிக்கூட டிப்டி இன்ஸ்பெக்டரின் குறிப்பின்படி அங்கீகாரம் எதிர்பார்த்து சென்ற ஜூன் மாதம் முதல் நடக்கப்பட்டுவரும் 6-ம் வகுப்பை ஷை தேதி முதல் அங்கீகரித்தும் இவ்வருஷத்தில் 7-ம் வகுப்புவைக்க உத்திரவு ஆகும்படிக்கும் வேண்டிய நடவடிக்கைகளைச் செய்துதர வேண்டுமென பலமுறை இச்சங்கத்தில் தீர்மானித்து சம்பந்தப்பட்ட ஜில்லா போர்டு அதிகாரிகளுக்கும், கல்வி அதிகாரிகளுக்கும், நகல்கள் அனுப்பப்பட்டும், மற்றும் வடக்கு ராமநாதபுரம் ஜில்லா போர்டு தலைவராயிருந்தவரிடம் முறையிட்டுக்கொண்டும் நாளதுவரை யாதொரு அங்கீகாரமும் இப்பள்ளிக்கூடத்திற்கு ஏற்படாமல் இருப்பது வருந்தத்தக்க விஷயம். எனவே இது விஷயத்தை இனியும் காலதாமதம் பண்ணுமல் பூர்த்தி செய்து வைக்கும்படியாக சம்பந்தப்பட்டவர்களைக் கேட்டுக் கொள்வதாகத் தீர்மானிக்கப்பட்டது.

இவ்வூர்ப் பாடசாலையில் பயிலும் மாணவர்களுக்கு இடவசதி செய்யும்படியும் இக் கட்டிடத்தை விஸ்தாரப்படுத்தியும் அதிகப்படி உபாத்தியாயர் நியமனம் செய்து தரும்படியாகவும் பிரஸிடெண்டைக் கேட்டுக் கொள்வதாகவும் தீர்மானிக்கப் பட்டது.

பிள்ளைகளைத் தவருமல் பள்ளிக்கு ஆஜர் ஆகும்படிக்குச் செய்ய வேண்டுமென்று கமிட்டி மெம்பர்களைக் கேட்டுக்கொள்வதாகத் தீர்மானிக்கப் பட்டது.

### ஸ்ரீ. இ. வெ. ரா. பெல்லாரிக்கு மாற்றம்

ஹிந்துஸ்தானி எதிர்ப்பு விஷயமாக சிறை சென்ற ஸ்ரீ ஈ. வெ. ராமசாமி நாயக்கர் சென்னையிலிருந்து பெல்லாரி சிறைச்சாலைக்கு மாற்றப்பட்டார்.



காரைக்குடி நடராஜா டாக்கீஸில் வரப்போகும் 'வாள்வீர'னில் ஒரு காட்சி





## உள்ளூர் சங்கங்கள்

### தாகூர் வாசகசாலை

வாசகசாலையின் 9-வது ஆண்டு நிர்வாகஸ்தர்கள் தேர்தல் 19—2—39ல் நடந்தது. கீழ்க்கண்டவர்கள் தேர்ந்தெடுக்கப் பெற்றனர்.

தலைவர்: ஸ்ரீ கி. கோவிந்தராஜலு, உப-தலைவர்: ஸ்ரீ சித. மெய்யப்பன், காரியதரிசிகள்: குமர. சோமசுந்தரன், பழ. சுப்பிரமணியன்.

17 பேர்களடங்கிய ஒரு கமிட்டியும் நியமிக்கப்பெற்றது. மேற்கண்ட நிர்வாகஸ்தர்கள் போக மற்ற 13 பேர்கள் வருமாறு: ஸ்ரீமான்கள் ராம. சிதம்பரம், நா. பாலசுப்பிரமணியன், வெ. சாமிநாதன், ம. நாராயணன், பி. பாக்கியம், தெ. முத்துக்கருப்பன், அழ. பெரியகருப்பன், பழ. மெ. பெரி. மெய்யப்பன், எஸ். ராமய்யா, ரா. கோபாலகிருஷ்ணன், லெ. ஷண்முகம், லெ. சுபிரமணியன், சுப. மெய்யப்பன்.

### ஆண்டு விழா

தாகூர் வாசகசாலையின் எட்டாவதாண்டு நிறைவுக் கொண்டாட்டம் 19-2-39 ஞாயிற்றுக்கிழமை காலை, மாலை இரு நேரங்களிலும் தெற்குத் தெருவிலுள்ள 'மகாத்மா நிலையத்தில்' சென்னை ஸ்ரீ கே. எஸ். வேங்கடரமணி தலைமையில் நடைபெற்றது. சுமார் 508 பேர்கட்குமேல் விஜயம் செய்திருந்தனர். புதுக்கோட்டை இயற்கை வைத்தியர் ஸ்ரீ கே. லெட்சுமணசாமி சர்மா, 'சுதந்திரம்' என்பது பற்றியும் திருநெல்வேலி தமிழ்ப்பேரறிஞர் ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார், 'தமிழ்ச் செல்வம்' என்பது பற்றியும் விரிவுரை நிகழ்த்தினர்கள். தலைவர் முடிவுரைக்குப் பின் ஸ்ரீ ராம. சிதம்பரம் வந்தனோபசாரங் கூற விழா இரவு 8-30 மணிக்கு முடிவுற்றது.

ஸ்ரீ சி. எப். ஆண்ட்ரூஸ், ஜவஹர்லால் நேரு, பாம்பே முதன் மந்திரி கனம். பி. ஜி. கேர், கனம் விஜயலட்சுமி பண்டிட், கனம் ஸி. ஜே. வார்க்கி அரியநாயகம், சுவாமி சுத்தானந்த பாரதி, தமிழ் மாகாண காங்கிரஸ் கமிட்டித் தலைவர் இன்னும் சிலரிடமிருந்தும் வாழ்த்துச் செய்திகள் வந்திருந்தன.

### செட்டியார்கள் நலவுரிமைச் சங்கம்

இச்சங்கத்தின் நான்காவது ஆண்டு ஐந்தாவது நிர்வாக சபைக்கூட்டம் 22—2—39 காலை 10-15 மணிக்கு ஸ்ரீ அள. கரு. அடைக்கப்ப செட்டியார் தலைமையில் நடைபெற்றது. கணக்கு வாசித்து ஒப்புக்கொள்ளப் பெற்றது. ஸ்ரீ நாக. மெ. சுப. வள்ளியப்ப செட்டியாரையும், ஏன். சிதம்பரத்தையும் அங்கத்தினராக சேர்த்துக்கொள்ளப் பெற்றது. நிர்வாக சபையிலேற்பட்ட காலிஸ்தானத்திற்கு திரு அள. அருணசலம் தேர்ந்தெடுக்கப் பெற்றார். இந்நகர் முத்துப்பட்டணம் சேர்வைகார ஊரணிக்குத் தென்புரம் நாட்டுக்கோட்டை செட்டியார்களால் கட்டப் பெற்றிருக்கும் மயானம் எப்பொழுதும் அவர்களுக்காகவே ஒதுக்கியிருந்ததை கெவர்ன்மெண்டார் எல்லா சமூகத்தாருக்கும் பொதுவாக் இருக்கவேண்டு மென்று அறிவித்திருப்பதால்,வழக்கமாக அவர்களுக்கு ஒவ்வொரு நகரிலும் தனித் தனியே மயானமிருந்து வருவது போல் இந்த மயானத்தையும் முன் போலவே நாட்டுக்கோட்டை செட்டியார்களுக்கே ஒதுக்கித் தரவேண்டுமென்று, நமது நகரசபையாரையும், கவர்ன்மெண்டாரையும் கேட்டுக் கொள்கிறது என்ற தீர்மானம் ஏகமனதாக நிரைவேறியது.

### இந்திய இளைஞர் சங்கம்

21-2-39 மாலை 4-மணிக்கு எஸ். எம். எஸ். ஹைஸ்கூலில் முனிஸிபல் கமிஷனர் திரு டி. பிருஷோத்தம் தலைமையின் கீழ் சங்க மாஜி காரியதரிசி திரு ஏ. ஆர். சங்கர் நாருயணன்செட்டியார் மலாய்நாடு செல்லும் பொருட்டு ஓர் தேநீர் விருந்தும் பாராட்டுக் கூட்டமும் நடந்தது. நண்பர் சங்கர் நாருயணன் பாராட்டி சங்கத் தலைவர் திரு சித. க. கதிரேசன் செட்டியார், ராம. சிதம்பரம், டாக்டர் எஸ். எஸ். சாரி, டாக்டர் ரெத்தினசாமி, டாக்டர் பீம்சிங், டாக்டர் வர்க்கீஸ், வி. ஆர். வீரப்பன், M.B.சுந்தரேசய்யர், சா. அழகப்பன் ஆகியோர் பேசினர்கள். பிறகு பிரதம விருந்தினர் ஏ. ஆர். சங்கர் நாருயணன் பதிலளித்ததும் காரியதரிசியால் வந்தனங் கூறப்பெற்று குரூப் போட்டோ ஒன்றும் எடுக்கப்பெற்றது.

18—2—39 காலை 10-30 மணிக்கு தலைவர் சித.க. கதிரேசன் செட்டியார் தலைமையின் கீழ் மகாசபை கூடியது. திரு காரியதரிசி ஏ. ஆர். சங்கரநாராயணன் மலாய்நாடு செல்வதால் அவருடைய ராஜினமா ஒப்புக்கொள்ளப் பட்டது. அன்னுருக்கு 21—2—39௳ யன்று முனிஸிபல் கமிஷனர் தலைமையில் ஓர் பிரிவு உபசாரவிருந்து நடத்துவதென்றும், புதிய காரியதரிசியாக ஸ்ரீ எஸ். ராமனுதனை ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதென்றும், நமது நகரத்தின் ரோடுகளில் மழைபெய்தால் தண்ணீர் தேங்கி அசுத்தமாக நின்று சுகாதாரத்திற்கு கேடுவிளைவிப்பதால் கவனித்து செப்பனிட வேண்டுமென்று நகர சபையாரைக் கேட்டுக் கொள்வதாகவும் தீர்மானங்கள் செய்யப்பட்டன.

### அர்ச் ஞானப்பிரகாசியார் சங்கம்

இச்சங்கத்தின் நிருவாகக் கமிட்டிக் கூட்டம் 19-2-39 ஞாயிற்றுக்கிழமை உபதலைவர் திரு வி. சின்னையா பிள்ளை தலைமையில் கூடியது. போப்பாண்டவரின் எதிர்பாராத மரணத்திற்கு வருந்துவதாகவும், கத்தோலிக்கத்தின் மத விஷயங்களை இழிவாக சித்தரிக்கும் பத்திரிகைகளையும் மத விஷயங்களில் தலையிட்டு அபத்தங்களை எழுதும் பத்திரிகைகளைப் பகிஷ்கரிப்பதென்றும் ஏகமனதாய்த் தீர்மானங்கள் நிறைவேறின.



## கதருடுத்தும் படித்தவர்களே ஓட்டர்?

### தமிழ்நாடு காரியக் கமிட்டி முடிவுகள்

18—2—39 காலை 9-மணிக்குக் காங்கிரஸ் மாளிகையில் நடைபெற்ற காரியக்கமிட்டிக் கூட்ட நடவடிக்கைகளின் விபரம் வருமாறு:—

ராமநாதபுரம் ஜில்லா போர்டு தொகுதியிலிருந்து சென்னை செனெட்டுக்குப் பிரதிநிதியைத் தேர்ந்தெடுப்பது சம்பந்தமான தகராறு விவாதிக்கப்பட்டது. ஸ்ரீமான் ஜெயராம் ரெட்டியார் தமது ஸ்தானத்தை ராஜினமா செய்ய வேண்டுமென்றும், ஸ்ரீமான் பி. எஸ். குமாரஸ்வாமி ராஜா எம். எல். ஏ., நடத்தை தவறென்றும் கமிட்டியில் முடிவு செய்யப்பட்டது. இதன்படி ஸ்ரீமான் ஜெயராம் ரெட்டியாரின் ராஜினமாவும், ஸ்ரீமான் குமாரஸ்வாமி ராஜா வருத்தந்தெரிவித்த கடிதமும் ஏற்றுக் கொள்ளப்பட்டன.

1938-ம் வருஷத்திய வரவு செலவுத் திட்டம் நிறைவேற்றப்பட்டது.

சர்க்காரும், கைத்தொழில் கமிஷனரும் ஓர் முடிவுண்டுபண்ணியதை மீறி பிரஸை மூடியுள்ள டயோஸிஸன் அச்சுக்கூட முதலாளிகளின் செய்கையைக் கண்டிப்பதாயும்; இது சம்பந்தமாகத் தக்க நடவடிக்கை யெடுத்துக் கொள்ள வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்வதாகவும் ஸ்ரீ சா. கணேசன் கொண்டுவந்த அவசரத் தீர்மானம் ஏகமனதாக நிறைவேறிற்று.

அ. இ. கா. கமிட்டிக்குக் கீழ்க்கண்ட திருத்தங்களைக் காரியக்கமிட்டி சிபார்சு செய்தது.

(1)4 அணு அங்கத்தினர் சந்தா செலுத்தி கதரையே வழக்கமாக அணிந்து, விதேசித்துணிகள் சாராயம் போன்ற வியாபாரங்களில் சம்பந்தமில்லாது, சொந்தமாக கையினல் 2,000 கஜம் நூல் நூற்று, இருப்பவர்களே தான் காங்கிரஸ் கமிட்டிகளில் பதவி வகிக்க அருகதையுண்டு.

(2) காங்கிரஸ் தேர்தல்களில் எழுதப் படிக்கத் தெரிந்து, கதருடுத்துபவர்களையேதான் ஓட்டுப்போட அனுமதிக்க வேண்டும்.

1939-ம் வருஷத்து ஸ்தல ஸ்தாபனங்களின் உபகமிட்டிக்கு கீழ்க்கண்டவர்கள் நியமிக்கப்பட்டனர்:— ஸ்ரீமான்கள் ஒ. பி. ராமஸ்வாமி ரெட்டியார், வி. என். முத்தரங்க முதலியார், வி. பி. சுப்பையா, எம் டி. தியாகராஜ பிள்ளை.

ஏற்கனவே அறிவித்தது போல் பாதிக்கப்பட்ட விடங்களில் பஞ்ச நிவாரணக் கமிட்டிகளை நியமிக்க வேண்டுமென்றும், பாதிக்கப்பட்ட விடங்களில் கிஸ்தி வசூலை ஒத்திவைக்கும்படி சர்க்காரைக் கேட்டுக் கொள்வதாகவும் ஓர் தீர்மானம் நிறைவேறியது.

காந்தியடிகள் தொடர்ந்து தலைவராக விருப்பதில் நம்பிக்கைத் தெரிவிக்க வேண்டிய அவசியத்தை வற்புறுத்திக் கமிட்டித் தலைவர் விடுத்த சுற்றறிக்கை அங்கீகரிக்கப்பட்டது. 165 பதில்கள் கமிட்டித்தலைவரின் நோக்கத்தை அங்கீகரித்து வந்திருந்தன.



## கப்பல் செய்திகள்

### நாகபட்டினத்திலிருந்து பினங்குக்குப் புறப்படுதல்

கப்பல்கள் நாகபட்டினத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| தலம்பா | 25—2—39 |
| ரஜுலா | 11—3—39 |
| தலம்பா | 25—3—39 |

### வருதல்

கப்பல்கள் மலாய் நாட்டிலிருந்து நாகபட்டினத்துக்கு வரும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரோணு | 2—3—39 |
| தலம்பா | 16—3—39 |
| ரஜுலா | 30—3—39 |

## சென்னை மார்க்கெட்

சென்னை, பிப்ர. 21—

| | |
|---|---|
| சவரன் மொத்தம் | 23-12—3 |
| " சில்லரை | 23-12—6 |
| பம்பாய் ஆலைத் தங்கம் | 37—1—0 |
| " தவணை | 36-14—9 |
| மூளை தோலா 1-க்கு | 36—7—9 |
| வெள்ளி (ரெடி) | 53—6—0 |
| " தவணை | 53-10—0 |
| " 1 ரூபாய் எடை | 0—8—9 |

### ரெங்கூன்

பிப்ர. 15—

நெல்

| | |
|---|---|
| நசைன் நெல் | 80—81 |
| கவுரின் மீடோன் | 86—87 |

புது அரிசி

| | |
|---|---|
| பெரியமில் ஸ்பெஷல் ரூ. | 193—0—0 |
| சிறிய மில் நசைன் | 200—0—0 |
| புழுங்கல் அரிசி | 227—0—0 |
| மில்ச்சார் | 222—0—0 |

## பினங்கு

பினங்கு, பிப்ர. 15-

| | |
|---|---|
| தவணை வட்டி | 0-4-0 |
| ரப்பர் பிக்கல் 1-க்கு | $ 34-70 |
| ஈயம் " " | $ 160-25 |
| கொப்பரா " | $ 3-45 |
| உண்டியல் விலை மதருஸ் ரெங்கூன் } ரூ. | 155 |
| " மைடான் கிலிடர் | 100 5/8 |
| " செய்கோன் டாலர் | 203 3/8 |
| " பேங்காக் திக்கல் | 125 7/8 |

## சிங்கப்பூர்

சிங்கப்பூர், பிப்ர. 11—

| | |
|---|---|
| தவணை வட்டி தை-மீ | 0-3-9 |
| ரப்பர் விலை பவுண்டு 1-க்கு | 26-1/8 |
| ஈயம் விலை பிக்கல் 1-க்கு | $ 107-50 |
| கொப்பரா காய்ந்தது | $ 3·30 |
| கொப்பரா கலப்பு | $ 3·20 |
| உண்டியல்விலை இந்தியாவுக்கு | 155-3/8 |
| " செய்கோனுக்கு | 203-3/8 |
| " மைடானுக்கு | 98-3/4 |

## செய்கோன்

செய்கோன், பிப்ர. 11—

| | |
|---|---|
| தவணை வட்டி தை மீ | 0-4-0 |
| நெல் விலை பிக்கல் 1-க்கு $ 3·70-லிருந்து | $ 3·75 |

உண்டியல் விலை

| | |
|---|---|
| இந்தியாவுக்கு $ 100-க்கு ரூ. | 75 1/8 |
| சிங்கப்பூருக்கு " | $ 48 3/8 |

### உள்ளூர் சினிமாக்கள்

**ஸ்ரீ ராமவிலாஸம்:—**

'யயாதி' என்ற தமிழ்ப் படம் நடக்கின்றது.

**ஸ்ரீ கிருஷ்ணு:—**

'அம்பிகாபதி' என்ற தமிழ் படம் நடக்கின்றது.

**நடராஜா:—**

'பாஸிங்ஷோ' என்னும் ஹிந்திப் படம் நடக்கின்றது.

# ★ சினிமாப் பகுதி ★

★

### கீசக வதம்

சுந்தரம் சௌண்ட் ஸ்டூடியோவின் தமிழ்ப்படம் ஹரிபாய் தேசாய் டைரக்ட் செய்வார். ரத்னபாய் சகோதரிகள் முக்கிய நடிகர்கள்.

### மகா நந்தா

ஜயா பில்ம்ஸாரால் தயாரித்துவரும் இப்படத்தை ஸ்ரீ மார்க்கோனி டைரக்ட் செய்கிறார். இவ்வாரத்தில் சில தெருக்காட்சிகள் பிடிக்கப்பட்டு வருகிறது.

### காளிதாஸ்

தெலுங்கில் தயாரித்துவரும் இப்படத்தில் நடிக்கும் கண்ணம்மாள் அசௌக்கியமாய் இருப்பதுபற்றி, படத்தின் இதர காக்ஷிகளை டைரக்டர் ஸ்ரீ பாலு பிடித்துவருகிறார்.

### மன்மத விஜயம்

இப்படம் ஜயா பில்ம்ஸ் ஸ்டூடியோவில் ஆரம்பமாகிவிட்டது. இதில் எலக்ட்ரிக் இன்ஸ்பெக்டர் எம். சுப்ரமண்யம் நடிக்கின்றார். டைரக்டர் ஜி. பட்டு ஐயர்.

### அபலை

கிருஷ்ண பில்ம்ஸார் சிறந்த நடிகர்களைக் கொண்டு இப்படத்தை தயாரிக்க வேண்டிய ஏற்பாடுகளை முடித்துவிட்டனர். பி. எஸ். வி. ஐயர் டைரக்ஷனில் கல்கத்தா ஈஸ்டு இந்தியா ஸ்டுடியோவில் இப்படம் பிடிக்கப்படும், நடிகர் கோஷ்டி இவ்வாரக் கடேசியில் கல்கத்தா செல்லும்.

### ஆனந்த ஆஸ்ரமம்

ஸ்ரீ ஸி. வி. ராமன் டைரெக்ஷனில் தயாராகி வரும் இப்படம் அநேகமாய் முடிந்துவிட்டது. இதில் பல நடிகரத்தினங்களும், காமெடியன் எஸ். எஸ். கொக்கோவும் இதில் தோன்றுவார்கள்.

### கவி காளமேகம்

பிரிமியர் சினிடோன் சௌபாக்கியவதியில் நடித்துவரும் ஸ்ரீமதி எஸ். பி. எல். தனலெக்ஷ்மி, இப்படத்தின் கதாநாயகியானதாசிமோகனாங்கியாக நடிப்பதற்கு ஒப்பந்தம் ஆகிவிட்டது. இப்படம் தமிழ்நாட்டு ஸ்டூடியோ ஒன்றிலேயே ஆரம்பிக்கப்படும்.

### நம் தேசிய சினிமா உலகிற்கோர் அதிர்ஷ்டம்

படப் பிடிப்பிற்கு அத்யாவசியமான 'ரா பில்ம்' என்ற செல்லுலாயிட்டிற்காகவும், பில்ம்ஸின் விலையாகவும், அவற்றை இறக்குமதி செய்யும் வரியாகவும் மேல் நாட்டினருக்கு இத்தொழிலோர் கோடிக் கணக்காக ரூபாயை அள்ளிக் கொடுக்கிறார்கள்.

மேற்கூறிய 'ரா பில்மை' இந்தியாவிலேயே தயாரித்து அன்னியநாடு செல்லும் பணத்தை எல்லாம் இந்தியாவிலேயே நிறுத்தி இந்தியருக்குப் பயன்படச் செய்ய ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது. இத்துடன் 'ரா பில்ம்' செய்யும் கைத்தொழிலை அபிவிருத்தி செய்யும் ஒரு திட்டத்தையும் பம்பாய் பிரமுகர்கள் ஏற்படுத்தியிருக்கின்றார்கள்.

இத்திட்டம் பண்டித ஜவஹர்லால் நேரு, மந்திரி கனம். வி. வி. கிரி போன்றவர்களால் இந்திய தேசிய கைத்தொழில் நிற்மாணக் கம்மிட்டிக்கு சமர்பிக்கப் பட்டிருக்கிறது.

### புலி வேட்டை

ஒல்டு விண்டோஸ் பில்ம்ஸார் 'புலி வேட்டை' என்னும் படத்தை ஜயப்பூர் காடுகளில் பிடித்து வருகிறார்கள்.

இவர்கள் அடுத்தபடியாகத் தயாரிக்கப்போகும் படம் 'உதயபுரி அரண்மனைகளையும், விசேஷங்களையும்' பற்றியதாகுமெனத் தெரிகிறது.

### மதராஸ் எக்ஸ்பிரஸ்

பூராப்படமும் முடிந்து காப்பிகள் தயாராகிக்கொண்டு வருகின்றன.

இதுவரை வெளிவந்துள்ள தமிழ்ப் படங்களுக்குள் மேலான காதல், சோகம், திடுக்கிடும் சம்பவங்கள் நிறைந்த இப்படம் இம்மாதம் 25௨க்குள் செயிண்ட்ஜார்ஜ் போர்டுக்கு தணிக்கைக்கு அனுப்பப்படும்.

### கிருஷ்ணன் தூது

இப்படத்தில் இன்னும் சில காக்ஷிகளே பாக்கி இருக்கின்றன. ஷூட்டிங்களும் வெகுவாக முடிந்துவிட்டன. பீமன் நாகலோகத்திற்குச் சென்று, நாககன்னிகைகள் அவனுக்கு அமுருதம் கொடுப்பது, தேவேந்திரன் தர்பாரில் ஓர் அழகிய பெண் நடனம், கிருஷ்ணன் கருடவாகனராய் வருதல் முதலிய காக்ஷிகள் அதிசயிக்கத்தக்கது.

### பக்த குமணன்

இப்படம் பாம்பே ஜோதி ஸ்டுடியோவில் விரைவிலும் உன்னதமான முறையிலும், தயாராகி வருகின்றது. ஸ்ரீ டி. பி. ராஜலெக்ஷ்மியும், ஸ்ரீ வி. ஏ. செல்லப்பாவும் முக்கிய நடிகர்களாகத் தோன்றுவார்கள். பேபி ருக்மணி தாசிப் பெண்ணாக நடிக்கும் காட்சி பார்ப்போர் மனதைப் பரவசப் படுத்தும்.

### தியானேச்சர்

வைஷ்ணவ மதஸ்தாபகர்களில் ஒருவரும் 13-வது நூற்றாண்டில் வசித்து வந்தவருமான 'தியானேச்வர்' என்றும் பெரியாரின் சரிதையை ஸ்ரீ பத்தேலாலும், தாம்ளேயும் பிரபாத் ஸ்டுடியோவில் படப்பிடிப்பிற்குக் கொண்டு வர முயற்சிகள்செய்து வருகின்றனர். இதை இந்தி,மாராத்தி முதலிய பாஷைகளிலும் பிடிக்கப்போவதாயும் தெரிகிறது.

ஸ்ரீ ராமவிலாசம் தியேட்டரில் வரப்போகும் 'ரம்பையின் காதலில்' ஒரு காட்சி.

★





### லட்சுமிபுரம் சொக்கலிங்க வித்யாசாலை

#### ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் விழா

லெட்சுமிபுரம் திரு. ந. சொ. அரு. அருணாசலம் செட்டியார் ஸ்தாபித்துள்ள சொக்கலிங்க வித்யாசாலையில் 20—2—39 பிற்பகல் 4-மணிக்கு "ஸ்ரீ ராமகிருஷ்ணர் விழா" இனிது கொண்டாடப்பெற்றது.

ஆசிரியர்களான திரு. எஸ். அருணாசலம் பிள்ளை, திரு. எம். இராமநாத அய்யர், ஸ்ரீ ராமகிருஷ்ணரின் சரித்திரத்தையும், மதக் கொள்கைகளையும், அவர் கண்டறிந்த உண்மைகளையும் பற்றி சொற்பெருக்காற்றினார்கள். மாணவ மாணவிகளான கே. சுப்பையா, எம். உண்ணாமலை முதலியவர்கள் பேசினர்.

### அமராவதி புதூர்

#### ஹிந்துஸ்தான் சாரணர் சங்கம்

20—2—39 காலை இவ்வூரிலிருந்து புறப்பட்டு காட்டம்மன்கோவில் நகரத்தார் ஹாலில் முகாம்போட்டு சமையல் செய்து போஜனம் முடிந்தவுடன் மாலை ஓய்வு எடுத்துக்கொண்ட பிறகு வாலிபர்சங்க உபதலைவர் ஸ்ரீ சுப. சோமசுந்தரன் தலைமையில் வாலிபர்சங்கக் காரியதரிசி ஸ்ரீ மு. இராமஸ்வாமி கொடியேற்றியபின்பு, கேம்ப்பயர் ஆரம்பமாகியது. சுமார் 100பேர்கள்வரை கூடியிருந்தார்கள், தீண்டாமையின் கொடுமை, உடற்பயிற்சி, சூதாட்டம், 'தாசில்தார்' என்ற சிறு நாடகம், மதுவிலக்கு ஆகியவைகள் காட்டியபிறகு முகாம் கலைந்தது என, திரு. கே. ஜான்பெரியநாயகம் அறிவிக்கிறார்.

### அரியக்குடி

#### மகாத்மா வாசகசாலை

17—2—39௨ பகல் 11-மணிக்கு வாசகசாலைக் கட்டிடத்தில் ஸ்ரீ ராம. லெ. லெ. சவுரிராஜன் செட்டியார் தலைமையில் பொதுக்கூட்டம் நடந்தது.

டை வாசகசாலை தலைவர். ஸ்ரீ சா. ராம. சித. ராமசாமி செட்டியார் மலாய் நாடு சென்றுவிட்டபடியால் சா. முருகப்ப செட்டியாரை தலைவராக ஏகமனதாய்த்தேர்ந்தெடுக்கப்பட்டது.

வாசகசாலைக் கணக்கு வெகுதான்ய வருஷம் கார்த்திகை மாதம் 19௨ முதல் 8௨வரை ஸ்ரீ அரு. சண்முகநாதனால் வாசிக்கப்பெற்று, ஒப்புக்கொள்ளப் பட்டது. பிறகு கீழ்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாய் நிறைவேறின.

ராமநாதபுரம் ஜில்லா மதுவிலக்குச் சட்டத்தைஅமுலுக்குக் கொண்டுவரும்படி சென்னை சர்க்காரைக் கேட்டுக்கொள்ளுகிறதென்றும், காரைக்குடி புதுச்சந்தையிலிருந்து அரியக்குடிக்கு வரும் வண்டிப் பாதையிலுள்ள ரயில்வே லெவல் கிராஸிங்கின் இருபக்கங்களிலுமுள்ள மேட்டுப் பாதை சீர்கெட்டுப் போயிருப்பதால், வண்டிகள் போக்கு வரத்துக்கு மிகவும் இடஞ்சலாக உள்ளபடியாலும், மேற்படி பாதையை கூடிய விரைவில் சீர்திருத்தம் செயும்படி ரயில்வே அதிகாரிகளைக் கேட்டுக்கொள்ளுகிற தென்றும், அண்ணமலை சர்வகலாசாலை சில காலமாக மாணவர்களுக்கும், உபாத்தியாயர்களுக்கும், தொடர்ந்து நடந்துவரும் சச்சரவை இக்கூட்டம் பலமாக் கண்டிப்பதுடன் வருங்கால பெரியார்களின் வாழ்க்கைக்கு பங்கம் ஏற்படாவண்ணம் நியாயமான முறையில் ஒரு முடிவை கூடிய விரைவில் ஏற்படுத்தும்படி கனம் சாஸ்திரியாரைக் கேட்டுக்கொள்ளுகிறதென்றும்,சமீபத்தில் கோரக் கொலையான ஸ்ரீ கிருஷ்ண தேவப் பட்டரின் மரணத்திற்கு அநுதாபம் தெரிவித்துக்கொண்டு இக்கூட்டம் முடிந்தது.

#### சூதாட்டம்

அரியக்குடியில் காரைக்குடி போலீசார் 11—2—39௨யன்று ஓர் செட்டியார் வீட்டைச் சோதனை செய்து அங்கு சூதாடிக் கொண்டிருந்ததாகச் சொல்லப்படும் 14 பேர்களைக் கைதி செய்து திருப்பத்தூர் தாலூக்கா மாஜிஸ்திரேட்டிடம் ஆஜர் படுத்தியதில், கனம் மாஜிஸ்திரேட் வீட்டுக்காரர் ஸ்ரீ எஸ். லெக்ஷ்மணன் செட்டியாருக்கு ரூ 85 அபராதமும், மற்றவர்களுக்கு 15 முதல் 50 ரூ அபராதமும் விதித்தனர்.

அதிர்ஷ்டம்—சினிமாக் கதை

## தங்கம் கிடைத்தது; தங்கமும் கிடைத்தாள்?

### வக்கிலுக்கு வந்த அவதி

கோடீஸ்வரனென்றால் மோட்டார் நொறுங்கும்போது தூரத் தூக்கி வைத்துவிட்டு நொறுங்குமா என்ன? அதனால் நமது கோடீஸ்வரரும் மோட்டார் விபத்தில் சிக்கி, சொல்லாமல் கொள்ளாமல் எமனிடம் சென்றுவிட்டார். ஆனால், அந்த மனிஷர் ஏதோ ஒரு உயிலை எழுதி வைத்திருந்தார். கோடீஸ்வரருக்கு சூர்யா என்றொரு பெண் குழந்தை இருந்தது. சிறு வயதிலேயே அது எங்கோ காணமற் போய்விட்டது. அது கண்டுபிடிக்கப் பட்டால், சொத்தெல்லாம் அதற்குச் சேரவேண்டும்; இல்லாவிட்டால், யாரோ ஒரு ஜம்புலிங்கமும், ஒரு ஸ்வர்ணமும் விவாகம் செய்துகொண்டு அந்த சொத்தைப் பெறவேண்டும் என அதில் குறிக்கப் பட்டிருந்தது.

இறந்தவருக்கு சோமநாத் என்றொரு வக்கீல். அவரது பெண்ணின் பெயரும் ஸ்வர்ணம். ஆகவே, உயிலைப் பார்த்ததும் வக்கீல் மனதில் ஒரு யோசனை தோன்றியது. ஒரு ஜம்புலிங்கத்தைத் தேடிப் பிடித்துவிட்டால், அவ்வளவு சொத்தும் தனக்கு வந்துவிடும் என்று கனவு கண்டாரவர். ஆனாலும். சூர்யாவின் நினைவு அவருக்கு நடு நடுவே தோன்றிக்கொண்டிருந்தது. ச்சு! இத்தனை வருஷம் காணமற்போனவள் இனியா வரப் போகிறாள் என்று சமாதானப்படுத்திக் கொண்டு ஜம்புலிங்கத்தைத் தேடப் புறப்பட்டார்.

உண்மை ஜம்புலிங்கம்—வி. ஜே. லிங்கம் என்ற பெயருடனும், ஸ்வர்ணம்—தங்கம் என்ற செல்லப் பெயருடனும் காலேஜில் வாசித்து வந்தனர். அவர்களிடை நேசம் வளர்ந்து காதலாக மாறியது. தமக்கு வரப் போகும் கோடிக்கணக்கான பெருஞ் செல்வத்தைப் பற்றி அவர்களுக்கு ஒரு சிறிதும் தெரியாது.

நிற்க, சோமநாத்தும் அவரது ஆளும் ஒரு ஜம்புலிங்கத்தைப் பிடித்துக்கொண்டு சென்னைக்கு வந்தார்கள். ரொம்ப சுலபமாக இதை ஒரு வரியில் எழுதிவிட்டோம். ஆனால் அவர்கள் போய் வருமுன் பட்டபாடு கொஞ்ச நஞ்சமல்ல. மோட்டார் 'இடக்கு' செய்துவிட்டது. ஜம்புலிங்கமும், அவனது தோழன் ராக்கனும் சென்னையை முன்பின் பார்த்ததில்லை. ஆகவே, தமாஷிற்குக் கேட்கவேண்டுமா?

உண்மை லிங்கமும், தங்கமும் பரீட்சை பாஸ் செய்துவிட்டு வேலைக்காக அலைந்தார்கள். வெகு சிரமப்பட்டார்கள். வயிற்றுப்பசி தாங்காது லிங்கம் தூக்கிட்டுக்கொள்ளப் போனான். அவனைத் தங்கம் காப்பாற்றினாள். இருவரும் சோமநாத் என்ற வக்கீலிடமே வேலைக்கு அமர்ந்தார்கள்.

தங்கம் வக்கீலுக்கு உதவி ஆளானாள். லிங்கம் போலி கோடீஸ்வர ஜம்புலிங்கத்திற்கு உதவி ஆளானான். அந்த நிலைமையில்தான், வக்கீல் வீடே காதல் மயமாக ஆகிவிட்டது. கிழட்டு வக்கீலுக்குத் தங்கத்தின்மீது மோகமேற்பட்டது. தங்கத்திற்கோ லிங்கத்தின் மீது இணைபிரியாக் காதல். சோமநாத்தின் மகள் ஸ்வர்ணம் ஜம்புலிங்கத்தைக் காதலிப்பதுபோல் நடித்துக்கொண்டு, உண்மையில் வி. ஜே. லிங்கத்தைத் தன் வலைக்குள் போட முயன்றுகொண்டிருந்தாள். இது இப்படியிருக்க, வேலைக்காரி ரங்காயி ராக்கனைக்கண்டு சொக்கிவிட்டாள்.

ஒருநாள் தங்கம், வக்கீலின் சிக்கார்டுகளைக் கிளறிக்கொண்டிருந்தாள். அவளது திருஷ்டியில் கோடீஸ்வரரது உயில் சிக்கிவிட்டது. சூர்யா கிடைக்காவிட்டால், தானும் லிங்கமும் கோடீஸ்வரர்களாகக்கூடிய சான்ஸ் இருப்பதை அறிந்தாள். உயிலை எடுத்துக்கொண்டு லிங்கிடம் ஓடினாள். அவளைத் தடுக்க சோமநாத் முயன்றார். ஆயினும், தங்கம் தப்பித்துவிட்டாள். சோமநாத், லிங்கத்தை அழைத்து வந்தார். வஞ்சகமாக அவரது வீட்டில், வக்கீல் மகள் ஸ்வர்ணம் அவனைத் தன் வசப் படுத்த எவ்வளவோ முயன்றாள். லிங்கம் அவளை வெறுத்தான். உடனே ஸ்வர்ணம் 'ஐயய்யோ! கெடுக்கராண்டோய்!' என்று கத்திவிட்டாள். லிங்கம் சிறைப்பட்டான். உயில் போனது என்றதும் போலி ஜம்புலிங்கத்திற்குப் பைத்தியம் பிடித்துவிட்டது.

இந்த நிலைமையில் சூர்யா எங்கிருக்கிறாள்? அவள் சிறு குழந்தையாக இருக்கும்போது கோடீஸ்வரர்மீது ஆத்திரங்கொண்ட செல்லம் என்பவள் அவளைத் திருடிக்கொண்டு போய்விட்டாள். அவள் வீட்டில் அவளது மகன் தியாகுவோடு வளர்ந்து வந்தாள் சூர்யா செல்லம் சாகக்கிடந்தாள். அப்பொழுது சூர்யாவின் பூர்வ கதையை எடுத்துக் கூறலானாள். சூர்யாவின் தந்தையின் பெயரைக் கூறுமுன் அவளது ஆவி அவளது உடலிலிருந்து பிரிந்துவிட்டது.

தியாகுவும், சூர்யாவும் தெருப் பாடகன் அழகுவும் சென்னைக்குப் பிச்சை எடுக்க வந்தனர். தியாகு நோய்வாய்ப் பட்டான். சூர்யாவின் கழுத்தில் பழய அடையாளமுள்ள தங்கச் சங்கிலி இருந்தது. அதை விற்கப்போனாள்.

ஸ்வர்ணத்தை பலாத்காரமாக—மானபங்கம் செய்ததாக, லிங்கத்தின் மீது குற்றம் சாட்டப்படுகிறது. சூர்யா திருடிவிட்டதாகப் போலீசாரால் பிடிக்கப்பட்டு, பந்தோபஸ்தில் வைக்கப்படுகிறாள். ஜம்புவிற்கு சித்தப்ரமை!

அதிர்ஷ்டவசத்தால் ஏற்பட்ட இவைகளெல்லாம் என்னவாக முடிவடைகின்றன? ஆதியில் அதிர்ஷ்டத்திற்கு திருஷ்டி மங்கியிருந்தது. ஆனால் கடைசிவரையில் அப்படித்தானா? படத்தில்தான் பார்க்கவேண்டும்.

### சிங்கப்பூர்

#### நாட்டுக்கோட்டை செட்டியார்கள் வர்த்தக சங்கம்

ஒன்பதாவது வருட முதலாவது நிர்வாக சபைக் கூட்டம், 10-2-1939. வெள்ளிக்கிழமை மாலை 5-மணிக்கு சங்கக் கட்டிடத்தில் தலைவர் திரு. லெ. அ. அ. அண. நாகப்ப செட்டியார் தலைமையில் நடைபெற்றது.

1. 27-1-39௨ முதல் 10-2-39௨ வரையிலுள்ள கணக்குகள் வாசித்துக் காண்பிக்கப்பெற்று, அங்கீகரிக்கப் பெற்றன.

2. எட்டாவதாண்டு நிறைவு விழா-மகாசபைக் கூட்ட நிகழ்ச்சிகளும், தீர்மானங்களும் வாசித்துக் காண்பிக்கப் பெற்றன.

3. பல ஊர் சங்கங்களிலிருந்தும் இதர ஸ்தாபனங்களிலிருந்தும் வந்த கடிதங்கள் வாசித்துக் காண்பிக்கப் பெற்று ரிக்கார்டு செய்யப் பெற்றன.

### மாமக்காரனும் சாரதாச்சட்டமும்

ஸ்ரீ எஸ். ஆர். எம். எழுதுகிறார்:

கல்யாணத்தில் மாமக்காரன் மாமச்சடங்கு செய்ய வேண்டுமென்பது சில சமூகங்களின் கட்டுப்பாடு. மாமச்சடங்குசெய்யாவிட்டால் சமூகக்குற்றமென்றும் சமூகத்தார் ஜாதிப்ரஷ்டம் செய்வோமென்றும் சொல்கிறார்கள். அரசாங்கத்தின் சட்டம், பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் சின்னவயதிற்கு மேற்பட்டுக் கல்யாணம் செய்ய வேண்டுமென்றும், அதில்குறித்த வயதிற்குக் குறைந்து கல்யாணம் செய்தால், அதற்குஉரித்தாயுள்ளவர்களும்,அதில் கலந்துகொண்டு சடங்கு செய்தவர்களும், புரோகிதம் செய்தவர்களுங்கூடக் குற்றவாளி என்று சொல்கிறது.

இந்தவிடத்தில் மாமக்காரன் பாடு மிக மிகத் திண்டாட்டமாக ஏற்பட்டுவிடுகிறது. அதாவது, சாரதாசட்டத்திற்கு விரோதமான கல்யாணத்தில் மாமச்சடங்கு செய்தால், அரசாங்கத்தின் சட்டப்படி மாமக்காரனும் கிரிமினல் குற்றத்திற் காளாகவேண்டும். மாமச்சடங்கு செய்யாவிட்டால் சமூகக் கட்டுப்பாட்டின்படி சமூகக் குற்றத்திற் காளாகவேண்டும். இந்த இரண்டில் ஒன்றை மாமக்காரன் அனுபவிக்க வேண்டியதாய் நேருகிறது. இதிலிருந்து தப்பித்துக்கொள்ள எண்ணி, பெண் மாப்பிள்ளை சாதகத்தையோ, ஜெனன சர்டிபிகேட்டையோ, காண்பித்தால்தான் மாமச்சடங்கு செய்யலாமென்றால், மாமக்காரனிடத்தில் வயதை மெய்ப்பிப்பது சமூகவழக்கமில்லையென்றும், உலகத்திலில்லாத புதுவழக்கமிதுவென்றும், கல்யாணக்காரரும் சமூகத்தாரும் சொல்லி, மாமக்காரனை, சமூகக் கட்டுப்பாட்டின்படி சடங்குசெய்கிறாயா, சாதிப்ரஷ்டம் செய்யவேண்டுமா வென்கிறார்கள். இதைகேட்டதும் மாமக்காரன்வீட்டுப் பெண்களெல்லாம் நமக்கெதற்கு ஜாதகம் வயதெல்லாம் பார்க்கவேண்டும், நம்முடைய சடங்கை நாம் விடப்படாது, "பந்தல்காலிலே கட்டுச்சோத்தைக் கட்டிக்கொண்டாவது சடங்கு செய்யவேண்டும்" என்ற பழமொழிப்படி நாம் சடங்கைச் செய்ய வேண்டியதுதானென்றும், சமூகத்திலிருந்து தள்ளிவைத்து விடுவார்களே என்றும், பயந்து அலறுகிறார்கள்.

இந்த நிலையில் மாமக்காரர் என்பவர் குடும்பத்தை விட்டு விலகுவதா? சமூகத்தை விட்டு விலகுவதா? அல்லது கிரிமினல் குற்றவாளியாகி சிறைக் கூடம் செல்வதா? என்றெண்ணிக் கஷ்டப்பட வேண்டியதாய் நேருகிறது. இவைகளில் எந்தத்தொந்திரவையும் அனுபவியாமல் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு அரசாங்கத்தாரைச் சார்ந்ததாகும். ஆகவே, சாரதா சட்டத்திற்கு விரோதமான கல்யாணத்தை நடத்தினால், யார்யார் குற்றத்திற்குரியவர்களென்பதையும், அக்குற்றத்திற்காளாக வேண்டியவர்கள், மாப்பிள்ளை பெண்ணின் வயதை ருசுப்படுத்தச் சொன்னால், அதுபோல் செய்துதான் அவர்களை அந்தச்சடங்கு செய்யச்சொல்ல வேண்டுமேயன்றி அதற்காக அவர்களை, சமூகத்திலோ நாட்டிலோ, தள்ளிவைத்த குற்றத்திற்காளாக வேண்டுமென்றும்; அரசாங்கத்தார் சுற்றறிக்கை அனுப்பி ஒவ்வொரு கிராமத்திலும் கிராம அதிகாரிகள் மூலம் தண்டோரா போட்டு விளம்பரப் படுத்தும்படியாகக் கேட்டுக்கொள்வதுடன், அவ்விதம் செய்யாவிட்டால் கல்யாணங்களில் சடங்கு செய்பவர்கள் சமூகத்தாரால் கஷ்டம் அனுபவிக்க வேண்டியதாகவும், புரோகிதர்கள் தொழிலில் கஷ்டப்பட வேண்டியதாகவும் ஏற்படும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

சிறு கதை

# ‘வா அப்படி வழிக்கு’

## வைர வியாபாரி சீற்றம்

### திருட்டுப் பட்டத்திலிருந்து தப்பின குருநாதன்

வெகு காலத்திற்கு முன்பு, புத்த மதத்தைச் சேர்ந்த ஒரு வைர வியாபாரி ஒருவன் குடும்பத்துடன் சுகமாக வாழ்ந்து வந்தான். அவன் வீட்டில் ஒரு புத்த சந்நியாசியும் வசித்து வந்தார். வியாபாரியும், அவன் மனைவியும் சந்நியாசியை சொந்தத் தந்தை போலப் பாவித்து அன்புடன் காத்து வந்தார்கள்.

ஒருநாள் அந்த வீட்டில் ஒரு எதிர்பாராத சம்பவம் நடந்தது. வியாபாரி ஓர் சிறிய வைரக்கல்லை செதுக்கிக் கொண்டிருந்தபோது கையில் ஆயுதம் பட்டு இரத்தம் பெருக ஆரம்பித்தது. அவன் அதைக் கவனியாமல் அவசரம் அவசரமாகக் காரியத்தைக் கவனித்துக் கொண்டிருந்தான். இந்தச் சமயத்தில் அந்த ஊர் அரசன் வைர வியாபாரியை அழைத்துக் கொண்டு வரும்படி ஆள் அனுப்பியிருந்தான். அந்த ஆள் வைர வியாபாரியைக் கூப்பிட்ட உடனே பதட்டத்தில் அவன் வைரக்கல்லைக் கீழே வைத்து விட்டு அரண்மனைக்குச் சென்றான்.

சிறிது நேரத்திற்கு முன்னே வியாபாரியின் கையிலிருந்து இரத்தம் கீழே சிந்தியிருந்ததல்லவா? அந்த இரத்தத்தில் இந்த வைரக்கல் விழுந்து சிவப்பாக ஆகியிருந்தது.

வைர வியாபாரி ஒரு பட்சியை வளர்த்துவந்தான். அந்தப் பட்சி கூடத்துக்கு வந்தது. ரத்தம் சிந்தியிருந்த இடத்தைப் பார்த்தது. அதற்குக்கீழே கிடந்தது விலை யுயர்ந்த வைரம் என்று எப்படித்தெரியும்? அது மாமிசத்துண்டென்று நினைத்து அதை ‘லபக்’ கென்று விழுங்கிவிட்டது!

இந்தச் சம்பவத்தை எதிரே இருந்த சந்நியாசி கவனித்துக் கொண்டிருந்தார். ஆனால் அவர் என்ன செய்ய முடியும்? பட்சியோ வைரத்தைத் தின்றுவிட்டுப் போய்விட்டது. இனிமேல் என்ன செய்வது?

அரண்மனையிலிருந்து வைர வியாபாரி வீட்டுக்கு வந்தான். (வைரம் வைத்திருந்த இடத்திற்கு வந்தான்.) வைரம் வைத்ருந்த இடத்திற்கு வந்தான்; அதைத் தேடிப் பார்த்தான்; அகப்படவில்லை. அதுதான் பட்சியின் வயிற்றில் இருந்ததே!

வைரத்தைக் காணாத அவன் பதை பதைத்து மனைவியிடம் ஓடினான் “எங்கே வைரம்”? என்று கேட்டான். “எனக்கு எப்படித் தெரியும்?” என்று அவளும் திடுக்கிட்டுப் போனாள். “ஐயோ! என் ஆஸ்தியெல்லாம் போய் விட்டதே! நான் என்ன செய்வேன்? என்று கதறினான்.

மறு நிமிஷம் அவனுக்கு ஒரு கொடிய சந்தேகம் உண்டாயிற்று. குருநாதரிடம் வந்தான். “சுவாமி! வைரத்தை நீங்கள் எடுத்தீர்களா?” என்று கேட்டான். “இல்லை” என்று சொல்லி அவர் தியானத்தில் அமர்ந்தார்.

ஆனால் வியாபாரிக்குச் சந்தேகம் தீர்ந்தபாடில்லை. மறுபடியும் மனைவியிடம் சென்றான். “இந்தா! இந்த ஸ்வாமியார்தான் எடுத்திருக்கவேண்டும். அவர்தானே அந்த இடத்தில் உட்கார்ந்திருக்கிறார். வேறு யார் அங்கே வந்து எடுத்திருப்பார்கள், சொல்லேன் அவர்தான் எடுத்துவைத்துக்கொண்டு ஒன்றும் தெரியாதது போல் நடிக்கிறார். அவரைக் கட்டி வைத்து உதைத்தால் நிஜத்தைச் சொல்லிவிடுவார்” என்றுசொன்னான். “ஐயையோ! உங்களுக்குப் பயித்தியம் பிடித்து விட்டதா? ஸ்வாமி ஒருநாளும் எடுத்திருக்கமாட்டார்” என்று மறுத்தாள் அவள்.

ஆனால் வியாபாரி தான் சொன்னதைச் செய்கையில்காட்ட ஆரம்பித்தான். ஸ்வாமியாரைக் கொண்டு வந்து தூணுடன் கட்டி அடிக்க ஆரம்பித்தான். அவன் மனைவி எவ்வளவோ தடுத்தும் அவன் கேட்கவில்லை. ஸ்வாமியார் அப்பொழுதும் உண்மையைச் சொல்லவில்லை.

அடி பொருக்க முடியாமல் குருநாதரின் உடலிலிருந்து ரத்தம் பெருகி வரத் தொடங்கிற்று. அப்பொழுது அங்கே வந்த அதே பட்சி கீழே வழிந்த இரத்தத்தைச் சாப்பிட ஆரம்பித்தது. இதைப்பார்த்த வியாபாரி அப் பட்சியை உதைத்து தள்ளினான். அது உயிரற்று பிணமாய் விழுந்தது.

அந்தப் பட்சி இறந்து போனதைப் பார்த்தார் குருநாதர். தன்னை மேன் மேலும் அடித்துக் கொண்டிருந்த வியாபாரியைப் பார்த்து “அப்பா! நிறுத்து நிஜத்தைச் சொல்லிவிடுகிறேன்” என்றார். வியாபாரி “வா அப்படி வழிக்கு” என்றான். “இங்கே பார்! இப்போது இந்தப்பட்சி இறந்து விட்டபடியால் நான் நிஜத்தைக் கூறலாம். ஆனால் முன்னடியே நான் நிஜத்தைக் கூறினால் உயிரோடிருந்த அந்தப் பட்சியின்வயிற்றைக் கிழித்துக் கொன்றிருப்பாய். இப்போது அது இறந்துவிட்டது. அதன் வயிற்றைக் கிழித்துப்பார். அங்கே இருக்கும் வைரம்” என்றார்.

வியாபாரி திடுக்கிட்டு அதன் வயிற்றைக் கிழித்துப் பார்த்தான். வைரம்பத்திரமாய் வயிற்றில் இருக்கக் கண்டான்.

விழுந்தான் குருவின் காலில், தன்னை மன்னிக்கும்படி கேட்டான். தன்மேல் கருணை காட்டும்படி மன்றாடினான்.

ஆனால் குருநாதர் கண்கள் மூடிக் கொண்டன. தேகத்தில் உண்டான ரத்தப் பெருக்கைத் தாங்க முடியாமல் அவர் உயிர் நீத்தார்.

“தன்னுயிர் நீப்பினும் செய்யற்க
தான் பிறிது இன்னுயிர் நீக்கும்வினை”

என்னும் தமிழ் வேதத்திற்கு இக்கதை ஒரு உதாரணமாக இருக்கின்றதல்லவா?

—பாரத மணி.

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

செய்கிறது. சமயம் பார்த்து எதிர்கால ராணியை பிரசவ அறையிலேயே கொன்றுவிடுகிறது. பிரசவ அறையிலிருந்து வெளிப்பட்டாலோ சமயமறிந்து கொன்றுவிடுகிறது. ரஷ்யாவிலும்கூட இதே கொடுமைதான் இதே போல வேலை செய்கிறது. ராஜ்யத்தை நடத்தக்கூடியவரை அயோக்கியரென்று நினைத்தாலோ அல்லது முக்கியமான அதிகாரத்தை வெறுத்தாலோ அவர்களுக்கு தண்டனை கொடுக்கப்படுகிறது; மேலும் அவர்கள்,எதிர்த்துச் சண்டைசெய்தாலோ அல்லது பகைத்தாலோ, அவர்களைக் கொன்று நிம்மதியடைகிறார்கள். அல்லது நாடுகடத்தி விடுகிறார்கள்.

(தொடரும்.)

# சென்னை ரேடியோ

★

## பிப்ரவரி 23-உ வியாழன்

மாலை5-00 ஸ்ரீ டி. பி. கோபாலாச்சாரி வாய்ப்பாட்டு. கொன்னக்கோல்,திருப்பாக்கடல் ஸ்ரீ. ஸ்ரீனிவாஸ அய்யங்கார் பிடில்.

5-30 ஸ்ரீ எஸ். ராஜய்யகாரு வீணை.

6-00 அ. இ. ரே. பாடகர்கள் பஜனை.

6--10 கூட்டுறவு முறையில் விற்பதும் வாங்குவதும். ராவ்பகதூர் ஸ்ரீ என். மார்த் தாண்டம் பிள்ளை தமிழில் பேசுவார்.

6-20 நாட்டுப்புறப் பாட்டுகள்.

6-30 ஸ்ரீ எஸ். ராஜய்யகாரு—வீணை.

6-45 ஸ்ரீ கே. ராஜாயி வாய்ப்பாட்டு.

7-15 ‘ஆரம்பத்திலிருந்து-2 கைத்தொழில்கள்’ ஸ்ரீ பி. எஸ். மூர்த்தி தெலுங்கில் பேசுவார்.

7-30 கும்பகோணம் ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை-பிடில்.

9-20 ‘பூமியில் வாழ ஓர் இடம்’ நீக்ரோக்களுக்கு ஆங்கிலத்தில் இ. ஜெ. பிங்கில் பேசுவார்.

9-35 ஸ்ரீ டி. கிட்டப்பா வாய்ப்பாட்டு.

## 24-உ வெள்ளி

பகல்2-2-30 பள்ளிக் கூடங்களுக்கு கல்வி ஒலிபரப்பு.

மாலை5-00 ஸ்ரீ கே. ஆர். லக்ஷ்மண சாஸ்திரியும்,ஸ்ரீ: ரங்கநாத சாஸ்திரியும் வாய்ப்பாட்டு.

5-30 ஸ்ரீமதி. உடுப்பி லக்ஷ்மி பாய் ரிகார்டுகள்.

6-05 ‘குடிசைக் கைத்தொழில்-வெல்லம் காச்சல்’ தெலுங்கில் ஓர் பேச்சு.

6-15 அத்யாத்ம ராமாயணம்.

6-30 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி.

9-35 ஐரோப்பிய சங்கீதம்.

## 25-உ சனி

மாலை5-00 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி.

5-15 ஸ்ரீ பி. எம். நடேச பிள்ளை வாய்ப்பாட்டு. (தேவாரம்)

6-00 கிராமபோன் ரிகார்டுகள்.

6-10 ‘மாடுகளுக்கு வரும் தொத்துவியாதிகள்’-தமிழில் ஒரு பேச்சு.

6-20 கம்ப ராமாயணம்.

6-30 ஸ்ரீமதி. எஸ். ஆதிலக்ஷ்மி அம்மாள் வாய்ப்பாட்டு.

9-35 ஸ்ரீ ஆர். நாராயணசாமி வாய்ப்பாட்டு.

10-00 “பதினொரு தந்தி வாத்தியகானம்” ஸ்ரீ வி. சேதுராமையாவும், ஸ்ரீ ஆர். கே. வெங்கட்டராம சாஸ்திரியும்—பிடில்.

## 26-உ ஞாயிறு

மாலை5-00 சித்தூர் ஸ்ரீ சுப்ரமண்ய பிள்ளை-வாய்ப்பாட்டு.

9-35 ஐரோப்பிய சங்கீதம்.

## 27-உ திங்கள்

மாலை6-00 ஸ்ரீ பி. ராதாகிருஷ்ணன் வாய்ப்பாட்டு.

6-05 ‘நாட்டுப்புற வருமானம்’ தெலுங்கில்.

6-30 ஸ்ரீமதி. எஸ். லெக்ஷ்மி நாராயணன் - வாய்ப்பாட்டு.

9-35 திருசூர். ஸ்ரீமதி. கே. கங்காபாய்-வீணை.

## 28-உ செவ்வாய்

மாலை5-00 ஸ்ரீ வி. வெங்கட கிருஷ்ணையர்-வாய்ப்பாட்டு.

5-30 ஸ்ரீ பி. எஸ். ராஜா அய்யங்கார்-வாய்ப்பாட்டு.

6-10 ‘கனி வளர்த்தல்’ தமிழ்ப் பேச்சு.

6-20 ‘இருவர் பாடும் இசைப் பாட்டு’ ஸ்ரீமதி. சி. எஸ். ராஜமும், ஸ்ரீ விஜயராவும்.

6-30 ஸ்ரீ பி. எஸ். ராஜா ஐயங்கார்-வாய்ப்பாட்டு.

9-20 செம்மங்குடி ஸ்ரீ நாராயண ஸ்வாமி அய்யர் பிடில்.

## திருச்சியில் ரேடியோ

அகில இந்திய ரேடியோவின் திருச்சினாப்பள்ளிக் கிளை ஸ்தாபனம் மே மாதத்தில் திறந்து வைக்கப்படலாமென மேற்படி ஸ்தாபன சீப் என்சினீயர் ஸ்ரீ கி. டபிள்யூ. காய்டர் அசோசியேடட் பிரஸ் பிரதிநிதியிடம் தெரிவித்தார். திருச்சிக்கு அவர் பிப்ரவரி 4-ந் தேதி போய்ச் சேர்ந்து ஸ்டூடியோ கட்டிட வேலையை மேற்பார்வையிட்டார். சென்னையிலிருக்கையில் அவர் அப்பொழுது சென்னைக்கென புதிதாகத் திருவொற்றியூரில் கட்டப்பட்டுவரும் ரிசிவிங்ஸெண்டர் சம்பந்தமான எஸ்டிமேட்டுகளைப் பற்றி விவாதித்தார்.

## திருச்சி

### செட்டிமார் நாட்டு மாணவர் கழகம்

திருச்சி செட்டிமார் நாட்டு மாணவர் கழகத்தின் கூட்டம் 18—2—39 சனிக்கிழமை மாலை 5 மணிக்கு காரியதரிசி சொ. இலக்குமணன் (நெற்குப்பை) தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் மூன்றாவது ஆண்டிற்கு அடியிற்கண்டவர்கள் நிர்வாகிகளாய் தேர்ந்தெடுக்கப் பெற்றார்கள். தலைவர் கெ. ஆர். முத்துக்கருப்பன் (கீழச்சிவற்பட்டி) உபதலைவர் எ. ஆர். அழகப்பன் (காரைக்குடி) காரியதரிசிகள் எஸ். பி. இராமையா (பூலாங்குறிச்சி) எம். கதிரேசன் (கண்டனூர்) பின்னர் கொத்தமங்கலம் திரு. பி. வெங்கடாசலம் அவர்கள் அசையும் படம் காண்பித்தார்கள். இரவு 9 மணிக்கு விழா இனிது நிறைவேறியது.



(2ம்பக்கத் தொடர்ச்சி)

சுதந்திரமுள்ள தேசத்திலோ சாதக பாதகங்கள் இரண்டுமே சொல்லப்படுமல்லவா? எனவே, சுதந்திரமுள்ள நாடுகளில் யுத்த உணர்ச்சியை ஊட்டுவது சிரமம்.

ஜனநாயகத்துக்கு உட்பட்ட உலகம் எவ்வளவு விசாலமாக இருக்கின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு சமாதான வெற்றி சித்திக்கும்.

### பிரிட்டன் உடனே கவனிக்கவேண்டும்

நமக்கு இருந்த பாதுகாப்பை நாம் இழந்துபோனோம். ஆதலின் தேசியப் பாதுகாப்புக்காக இதுவரை இல்லாத முயற்சிகளை நாம் எடுத்துக்கொண்டாக வேண்டும். தேசத்தின் மொத்த இயந்திர வசதிகள், மனித பலம் ஆகியவற்றைத் திட்டப்படுத்தி ஒன்று சேர்க்கவேண்டும். ஆண்கள், பெண்கள் ஆகியவர்களை இராணுவம், சிவில் ஆகிய தற்காப்புச்சேவைகளில் சேர்த்துக் கொள்ளவேண்டும். முழு இயந்திரப் போக்கும் சர்க்கார் கண்காணிப்பில் இருக்கவேண்டும், பொதுமக்களின் பொதுவான சம்மதத்தின் பேரில்தான் நாம் இவற்றைச் செய்ய வேண்டும்.

இதற்குப் பிரதிநிதித்வம் வாய்ந்த தேசிய சர்க்காரை ஏற்படுத்த வேண்டும். தேசத்தின் ‘மெஜாரிடி’ கொள்கையின்படி இது நடக்க வேண்டும். கட்சி வித்தியாசமே பாராட்டாமல் ஒரு முகமாய்ப் பொறுப்பேற்றுக் கொள்ள வேண்டிய சந்தர்ப்பம் இது என்று பிரிட்டனில் பெரும்பாலோர் கருதுகிறார்கள். இதர கட்சிகளுடன் சேர்ந்து சர்க்கார் பொறுப்பில் பங்கெடுத்துக்கொள்ள ஒவ்வொரு கட்சியும் தயாராயிருக்கிறது..

சென்ற ஆண்டில் யுத்தம் ஏற்பட்டிருந்தால் ஒரு பெரிய தாராளநோக்க முடைய சர்க்கார் ஏற்பட்டிருக்கலாம். மூனிச்சில் தவணை வாங்கிக்கொண்டிருக்கின்றோம். எனினும் ஆபத்துகள் நம்மை விட்டபாடில்லை. அவசரமும் ஆபத்தும் அவசியமும் கலந்துகிடக்கின்றன. தேசத்தை ஒற்றுமைப்படுத்தும் சர்க்கார் இன்றே ஏற்பட்டுத்தீர வேண்டும். இன்று நாம் யுத்தத்தில் மூழ்கியிருந்தால் எப்படியோ அவ்வளவு முக்கியமானது இது.

எதற்கும் இருதய சுத்தம்வேண்டும். சுதந்திர தாகம் வேண்டும். சுதந்திர சம்பந்தமுள்ள ஒவ்வொன்றையும் பெற வேண்டுமென்கிற ஆர்வம் வேண்டும்.

சுதந்திரம் என்பது எந்தக் காலத்திலும் நம் தேசத்தின் பிராணன் போன்றது. தேசத்தின் கௌரவமே அது தான். சுதந்திரத்தைக் கைவிட்ட போதெல்லாம் கை சோர்ந்து கிடந்தோம். சுதந்திரத்துக்குப் போராடின போதெல்லாம் பெரும்பலம் பூண்டோம்.

ஓயாமல் யுத்த பயத்துடன் வாழ்வதில் பயனில்லை. ஊக்கமும் நிச்சிதமும் வேண்டும். இதற்கு ஒரே ஒரு வழிதான். சுதந்திரத்தில் நமக்குள்ள நம்பிக்கையை மீண்டும் நாம் ஊர்ச்சிதம் செய்துகொள்ளவேண்டும். விடுதலைபெற்ற ஒரு உலகத்திலே விடுதலை பெற்ற ஒரு ஜனக்கூட்டமாய் வாழவே நாம் விரும்புகிறோம் என்பதைத் திரும்பவும் நாம் நிலை நிறுத்தவேண்டும்.

— ‘வர்ல்ட் ரேவ்யூ’

## மதிப்புரை

### கார்ப்பொரேஷன் சரித்திரம்

[இயற்றினவர் எ. கே. சந்திரசேகரன்—கிடைக்குமிடம்: ,விமோசனம் கம்பெனி, 155, தம்பு செட்டித் தெரு, சென்னை—விலை: ஓரணா.]

சென்னை ஒற்றை வாடைக் கொட்டகையிலே ஒரு நாடகம் நடந்தது. பிரபல ஸ்திரீபார்ட் ஒருவர் வருவதாக சென்னை முழுதும் பலமாக விளம்பரம் செய்யப் பட்டிருந்தபடியால், கொட்டகை கொள்ளாமல் கூட்டம். 10 மணிக்கு, கிழவிருப்புச் சகோதரர்கள் ‘விசில்’ அடிக்கவும் நாடகம் முறைப்படி ஆரம்பமாயிற்று. பின்பு ஆர்மோனியக்காரர், மிருதங்கக்காரர், பபூன், சில்லரை வேஷதாரிகள் ஆகியோர் வந்து 1½மணிநேரத்தைக் கடத்தினர். பின்னர் பிரதான ராஜபார்ட் வந்தார். வந்து கால்மணி நேரம் பாடிவிட்டு, அவர்

“உலகத்திலே.........”

என்று பேச ஆரம்பித்ததும், ஒருவர் மெதுவாக எழுந்து,

“உன்னைப் பிறந்தது முதல் பெத்து நாயக்கன் பேட்டையில் பார்த்துவருகிறேன். நீ எப்போது உலகச் சுற்றுப் பிரயாணம் செய்தாய்! உள்ளே போ. இந்தக் கொட்டகையின் நிலைமையைப் புரிந்து கொள்ளாத நீ உலகத்தைப் பற்றிப் பேச வந்து விட்டாயோ”

என்றார். (கொட்டகையின் நிலைமை ஸ்திரீபார்ட்டை எதிர் பார்த்ததுதான்!) இப்படிக் கேட்டது சரியோ தவறோ, ஆனால் அவர் உட்கருத்து என்ன வென்றால் விஷயத்தைக் கால தேச வர்த்தமான் மறிந்து பேசவேண்டுமென்பதுதான்.

சுமார் 300 வருடங்களுக்கு முன் சென்னையிலிருந்த நிலைமையையும், இப்போதுள்ள நிலைமையையும், நடுவில் வாழ்ந்த வரலாற்றையும் இப்புத்தகத்தில் புள்ளி விபரங்களுடன் விவரித்துக் கூறப்பட்டிருக்கிறது. சென்னைக் கார்ப்பரேஷனைத் திருத்த முயல்வோரும், குற்றங்கூற முயல்வோரும் இந் நூலின் ஒரு பிரதியைத் தம் வசம் வைத்துக்கோடல் நலம்.

# ரயில் வண்டிகளின் போக்குவரத்து கால விபரம்

## திருச்சியிலிருந்து—மானமதுரைக்கு

| ஸ்டேஷன்கள். | | 25 நி. பாஸ்ட் பாஸஞ்சர். | 1 நி. இன்டோ சிலோன் எக். | 67 நி. பாஸஞ்சர். | * 33 நி. பாஸஞ்சர். | * 29 நி. பாஸஞ்சர். | 31 நி. பாஸஞ்சர். | 7 நி. தனுஷ் பாஸ்ட் பாஸஞ் |
|---|---|---|---|---|---|---|---|---|
| திருச்சினாப்பள்ளி ... | | 3-57 | 7-30 | 10-20 | | 13-15 | 17-25 | 22-15 |
| புதுக்கோட்டை | வரு | 5- | 8-33 | 11-54 | | 14-30 | 18-52 | 23-34 |
| | புற | 5-6 | 8-41 | 12-0 | | 14-37 | 18-58 | 23-40 |
| நமனசமுத்திரம் ... | | 5-17 | 8-52 | 12-10 | | 15-0 | 19-9 | - - |
| திருமயம் ... | | 5-31 | 9-8 | 12-23 | | 15-13 | 19-23 | 0-3 |
| செட்டிநாடு ... | | 5-45 | 9-24 | 12-39 | | 15-30 | 19-37 | 0-19 |
| கோட்டையூர் ... | | 5-55 | 9-34 | 12-48 | | 15-39 | 19-47 | 0-29 |
| காரைக்குடி | வரு | 6-9 | 9-50 | 13-2 | • | 15-53 | 20-4 | 0-44 |
| | புற | 6-15 | 10-1 | | 14-5 | 16-24 | 20-35 | 0.50 |
| தேவகோட்டை ரஸ்தா | | 6-25 | 10-9 | | 14-13 | 16-32 | 20-43 | - - |
| கல்லல் ... | | 6-42 | 10-26 | | 14-30 | 16-49 | 21-0 | 1-16 |
| அரண்மனை சிறுவயல் | | 6-50 | - - | | 14-36 | 16-55 | - - | - - |
| நடராஜபுரம் ... | | 7- | - - | | 14-46 | 17-5 | 21-12 | 1-30 |
| நாட்டரசன்கோட்டை | | 7-13 | 10-48 | | 14-59 | 17-18 | 21.25 | 1-45 |
| சிவகெங்கை ... | | 7-25 | 10-59 | | 15-19 | 17-34 | 21-36 | 1-57 |
| மானமதுரை ... | | 8-2 | 11-31 | • | 15-56 | 18-10 | 22-10 | 2-30 |

* இக்குறியிட்ட வண்டிகள் நேரே மதுரைக்குச் செல்லுவன.

## மானமதுரையிலிருந்து—திருச்சிக்கு

| ஸ்டேஷன்கள். | | 32 நி. பாஸஞ்சர் | * 68 நி. பாஸஞ்சர் | 30 நி. பாஸஞ்சர். | 2 நி. இன்டோ சிலோன் எக் | 34 நி. பாஸஞ்சர். | 26 நி. பாஸ்ட் பாஸஞ்சர் | 8 நி. தனுஷ் பாஸ்ட் பாஸ |
|---|---|---|---|---|---|---|---|---|
| மானமதுரை ... | | | 8-12 | 12-15 | 14-47 | 17-0 | 18-50 | 23-6 |
| சிவகெங்கை ... | | | 8-46 | 12-51 | 15-18 | 17-35 | 19-24 | 23-38 |
| நாட்டரசன்கோட்டை | | | 8-57 | 13-2 | 15-30 | 17-46 | 19-35 | 23-50 |
| நடராஜபுரம் ... | | | 9-9 | 13-15 | - - | 17-58 | 19-47 | 0-4 |
| அரண்மனை சிறுவயல் | | | 9-19 | 13-25 | - - | 18-9 | - - | - - |
| கல்லல் ... | | | 9-25 | 13-32 | 15-55 | 18-15 | 19-59 | 0-19 |
| தேவகோட்டை ரஸ்தா | | | 9-42 | 13-49 | 16-14 | 18-32 | 20-16 | - - |
| காரைக்குடி | வரு | | 9-53 | 13-56 | 16-22 | 18-45 | 20-27 | 0-48 |
| | புற | 6-45 | 10-3 | 14-6 | 16-32 | | 20-36 | 0 58 |
| கோட்டையூர் ... | | 6-55 | 10-13 | 14-17 | 16-43 | | 20-47 | 1-9 |
| செட்டிநாடு ... | | 7-5 | 10-22 | 14-27 | 16-54 | | 20-57 | 1-20 |
| திருமயம் ... | | 7-24 | 10-38 | 14-44 | 17-9 | | 21-11 | 1-36 |
| நமன சமுத்திரம் ... | | 7-38 | 10-51 | 14-58 | 17-24 | | 21-25 | - - |
| புதுக்கோட்டை | வரு | 7-47 | 11-0 | 15-7 | 17-39 | | 21-34 | 1-58 |
| | புற | 7-53 | 11-6 | 15-13 | 17-48 | | 21-42 | 2-4 |
| திருச்சினாப்பள்ளி ... | | 9-30 | 12-30 | 16-45 | 19-0 | | 22-58 | 3-28 |

* இக்குறியிட்ட வண்டி மதுரையிலிருந்து நேரே வருவது.

## பஞ்சாங்கம்

| பர்மா. (தப்போம்லாசான்) | இங். (1939 பிப்ரவரி) | தமிழ். (மாசி) | வாரம். | வெகுதான்யஹு-இங் 1939. பர்மா-1300. |
|---|---|---|---|---|
| 6 | 23 | 12 | வியா | சது-31-5. ரேவ-35-3. சித்த அமி யோகம். |
| 7 | 24 | 13 | வெள் | பஞ்-30-46. அஸ்-36-9. அமி சித்த யோகம். |
| 8 | 25 | 14 | சனி | ஷஷ்-29-14. பர-36-5. மரண யோகம். |
| 9 | 26 | 15 | ஞாயி | ஸப்-26-35. கார்-34-55. சித்த யோகம். |
| 10 | 27 | 16 | திங் | அஷ்-22-56. ரோ-2-57. அமிர்த யோகம். |
| 11 | 28 | 17 | செவ் | நவ-18-32. மிரு-30-1. சித்த யோகம். |
| 12 | 1 | 18 | புதன் | தச-13-28. திரு-26-34. சித்த யோகம். |
| 13 | 2 | 19 | வியா | ஏகா-7-55. புன-22-43. அமிர்த யோகம். |

## நடப்பு வட்டி விகிதங்கள்

| மாதம். | நாள். | சென்னை | ரெங்கூன் | பினங்கு | சிங்கப்பூர் | செய்கோன் |
|---|---|---|---|---|---|---|
| ஈஸ்வர மாசி | 30 | 0 7 0 | 0 5 0 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 |
| பங்குனி | 30 | 0 7 3 | 0 5 0 | 0 4 0 | 0 4 0 | 0 4 0 |
| வெகுதானிய | | | | | | |
| சித்திரை | 31 | 0 7 3 | 0 4 6 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| வைகாசி | 32 | 0 7 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| ஆனி | 31 | 0 6 9 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| ஆடி | 32 | 0 6 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| ஆவணி | 31 | 0 6 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| புரட்டாசி | 30 | 0 6 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| அற்பசி | 30 | 0 6 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| கார்திகை | 30 | 0 6 3 | 0 4 0 | 0 4 6 | 0 4 0 | 0 4 0 |
| மார்கழி | 29 | 0 6 0 | 0 4 6 | | 0 4 0 | 0 4 0 |
| தை | 29 | 0 6 6 | 0 4 9 | | 0 4 0 | 0 4 0 |

REG NO. M. 3888 16 PAGES PRICE ANNA 1

SUBSCRIPTIONS
Inland Annual ... Rs. 5
Burma Annual ... Rs. 6
Foreign Annual ... Rs. 7

# ஊழியன்



## The "Oolian", A Nationalist Tamil Weekly

VOL. 18 | KARAIKUDI, 23RD FEBRUARY 1939, THURSDAY | NO. 34

### தி. நா. பாங்க் வழக்கு

பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள தி. நா. பாங்க் கிரிடிட்டர்களுக்கு ரூபாய்க்கு நாலணுவுக்கு குறையாமல் இன்டரிம் டிவிடெண்ட் கொடுக்கும்படி உத்தரவிடவேண்டுமென்று ஸ்ரீ எஸ். சௌரிராஜன் என்ற கிரெடிட்டர் கொடுத்திருக்கும்மனு 21உ சென்னை ஹைகோர்ட்டில் நீதிபதி வெங்கட்ரமணராவ் முன்பு விசாரணைக்கு வந்தது.

நீதிபதி: மார்ச் 15உக்குள் மனுச் செய்து கொள்பவர்களுக்கும் ரூபாயில் நாலணு வீதம் டிவிடெண்ட் கொடுக்க உத்தேசித்திருப்பதாகப் பத்திரிகைகளில் விளம்பரம் செய்யும்படி அபீவியல் லிக்விடேட்டருக்கு உத்தரவு பிறப்பிக்கிறேன். முதலில் பிரிட்டிஷ் இந்திய கிரெடிட்டர்களுக்கு கொடுக்கப்படும். வெளியார்களின் 'கிளெய்ம்களும்' தற்காலிகமாக ஏற்றுக்கொள்ளப்படும்.

ஸ்ரீ கிருஷ்ணசாமி: இதுவரையில் 'கிளெய்ம்'களை சமர்ப்பிக்காதகிரெடிட்டர்கள் ஏராளமாக இருக்கிறார்கள்.

ஸ்ரீ பார்த்தசாரதி: பாங்க் புஸ்தகங்களில் யார் யார் பெயர்கள் இருக்கின்றனவோ அவர்களுக்கெல்லாம் டிவிடெண்ட் கொடுக்கப்படும்.

ஸ்ரீ கிருஷ்ணசாமி: 'கிளெய்ம்'களை சமர்ப்பிக்காதவர்களுக்கு டிவிடெண்ட் கொடுத்தால் ஆக்ஷேபனை ஏற்படக் கூடும்.

நீதிபதி: கிரெடிட்டர் புத்திசாலிகளாயிருந்தால் திருவாங்கூரிலும், கொச்சியிலும் தங்கள், கிளெய்ம்களை சமர்ப்பிக்க வேண்டும்.

இந்த விஷயத்தில் புதிய முறைகளை அனுஷ்டித்தாக வேண்டும். யாருக்கும் அநீதி ஏற்படாமல் டிவிடெண்ட் கொடுக்கப்படும்.

கடைசியில் தீர்ப்புக் கூறுவது ஒத்தி வைக்கப்பட்டது.

### பொய்ப் புகார் செய்ததாக வழக்கு

இராமனுதபுரம் ஜில்லா சொக்கலிங்கம் புதூரில் ஒரு திருட்டுக் கேஸ் சம்மந்தமாக பொய்ப் புகார்கள் அடங்கிய ஒரு கம்ப்ளேண்டை போலீசாருக்குக் கொடுத்ததாகவும் அவ்வாறு புகார் செய்தவர் மீது வழக்குத் தொடர வேண்டுமென்றும் இராமனுதபுரம் ஜில்லா மாஜிஸ்டிரேட்டிடம் கொடுக்கப்பட்ட மனுவின் பேரில் ஜில்லா மாஜிஸ்டிரேட் ஸ்ரீ எ. ஆர். சி. வெஸ்டுலேக் 8-2-39 ல் உத்தரவு பிறப்பித்தார்.

சொக்கலிங்கம் புதூர் பிரபல பாங்கரான ஸ்ரீ எஸ். பி. எல். பி. நாராயணன் செட்டியார் சுமார் ரூ. 1 லக்ஷம் பெறுமான நகை, ரொக்கம், தஸ்தாவேஜுகள் ஆகியவற்றை தன் சகோதரனும் மற்றொரு பிரபல பாங்கரான ஸ்ரீ பழ. மு. காசி செட்டியாரும் களவாடியதாக காரைக்குடி போலீசாரிடம் புகார் கொடுத்திருந்தாராம். போலீசார் எல்லா தஸ்தாவேஜுகளையும், பேங்க் ட்ராவ்டையும், சிறிய ரொக்கத்தையும் கைப்பற்றி விட்டு நகைகளும் மற்றும் ரூ. 20,000 களவு போனதாகக் கூறுவது பொய் எனத் தெரிவதாகவும் ரிப்போர்ட்டு செய்தனராம். இதன் பேரில் மேற்படி நாராயணன் செட்டியார் மீது பொய்ப் புகார் செய்ததற்காக வழக்கு தொடர வேண்டுமாய் மனுச் செய்து கொள்ளப்பட்டது. இக்கேஸில் சம்பந்தப்பட்டவர்கள் நெருங்கிய பந்துக்களாயிருப்பதாலும், புகாரில் கண்ட விஷயங்கள் ஒரு பாகத்தில் சற்று மிகைப்படக் கூறியிருக்கிறதேயொழிய வேறொன்றும் இல்லாததாலும், நாராயணன் செட்டியார் சம்மந்தமில்லாமல் அவர் ரூம்பிலிருந்து எடுக்கப்பட்டிருக்கிறதென்றும், இத்தகைய கேஸ்களில் சர்க்கார் வழக்கு தொடரும் வகையில் பணச் செலவோ கோர்ட்டின் கால விரயமோ செய்யத் தேவையில்லையென்றும், ரெஸ்பாண்டண்டிற்கு சந்தர்ப்பம் அளித்தால் உண்மை தெரியவரும் என்றும் கூறி மாஜிஸ்டிரேட்டு மனுவைத் தள்ளுபடி செய்தார்.

மனுதார் சார்பாக ஸ்ரீமான்கள் எஸ். பத்மனுபாச்சாரியார், எம். பிச்சுமணி ஐயரும், எதிர் மனுதார் சார்பாக ஸ்ரீமான்கள் ஆர். கலியாண சுந்தரமய்யர், கற்பூரசுந்தர பாண்டியன் ஆகியோரும் ஆஜரானார்கள்.

### பரோடா சீர்திருத்தம்

பரோடா மகாராஜா சீர்திருத்த விவரங்கள் அடங்கிய பிரகடனம் ஒன்றை 20-2-39 மாலை வெளியிட்டிருக்கிறார். அதன்படி 'தாரா சபை'யில் (சமஸ்தான சட்டசபை) இப்பொழுதிருப்பதைக் காட்டிலும் அதிகமாக மெம்பர்கள் இருப்பார்கள். விரிவான பிரவேச ஓட்டுரிமைப்படி தேர்ந்தெடுக்கப்படும் மெம்பர்களே சட்டசபையில் மெஜாரிட்டியாயிருப்பார்கள். எல்லா மசோதாக்களும், பட்ஜெட்டும் சட்டசபையில் சமர்ப்பிக்கப்படும். சட்டசபையிலிருந்து உத்தியோகப் பற்றில்லாத ஒருமெம்பர் சமஸ்தான நிர்வாக கவுன்ஸில் (மந்திரி சபை) சேர்த்துக் கொள்ளப்படுவார். இன்னும் இரு மெம்பர்கள் பார்லிமெண்டரி காரியதரிசிகளாவார்.

### காரைக்குடி எஸ். எம். எஸ். ஹைஸ்கூல்

12-2-39உ காலை இந்நகர் ஹைஸ்கூலில் கலாசாலை பழைய மாணவர்களது கூட்டம் ஒன்று நடந்தது. 10—4—39ல் ஹைஸ்கூலின் வெள்ளி விழாக் கொண்டாட்டத்தை கனம் ராஜாஸர் அண்ணாமலை செட்டியார் தலைமையில் நடத்துவதென்றும், ஸ்கூல் பிரார்த்தனை ஹாலுக்கு மேல் மாடி ஒன்று 5000 ரூபாய் செலவில் இவ்விழா ஞாபகார்த்தமாய்க் கட்டிடம் கட்டுவதென்றும் முடிவு செய்யப்பட்டது

### துறையூரில் ஹிந்தி ஆதரவு

துறையூர் காங்கிரஸ் கமிட்டி ஆதரவில் 21—2—39 மாலை 6 மணிக்கு ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. ஏராளமான மக்கள் நிறைந்திருந்தனர். ஸ்ரீ பாலசுப்ரமணியம் தலைமை வகித்து முன்னுரையாகச் சிறிது பேசினார். அதன் பிறகு காரைக்குடி ஸ்ரீ சா. கணேசன் எழுந்து இரண்டு மணி நேரம் சால் கோபாங்கமாக காங்கிரஸ் மகாசபையின் அருந் தொண்டைப் பற்றியும் காங்கிரஸ் மந்திரிசபையின் மட்டற்ற சேவையைப் பற்றியும் இந்தி மொழியின் இன்றியமையாத அவஸ்யத்தைபப்ற்றியும் பிரசங்கம் செய்தார். இடையிடையே பல ஹிந்தி எதிர்ப்பாளர்கள் கொடுத்துக் கொண்டே இருந்த வினாத் தாள்களை எல்லாம் சேர்த்து வைத்துக்கொண்டிருந்து இறுதியில் அவற்றிற்கெல்லாம் தக்க பதில் உரைத்ததுடன் ஹிந்தியை எதிர்க்கும் தமிழ் அன்பர்கள் எனக் கூறிக்கொள்ளும் அவர்கள் தயை செய்து தமிழை எழுத்துப் பிழையின்றியாவது எழுதக் கற்றுக் கொள்ளுமாறு வேண்டிக்கொண்டார். கூட்டம் மிகவும் திருப்தியுடனும் அமைதியுடனும் இரவு 9 மணிக்குக் கலைந்தது.

(ஒ. நி.)

### ஹைதராபாத் காங்கிரஸ்

ஹைதராபாத் சமஸ்தான காங்கிரஸைச் சேர்ந்த 50 பிரமுகர்களின் தூதுக் கோஷ்டி யொன்று ஸ்ரீ நாஞல் தலைமையில் வார்தாவுக்கு வந்து சேர்ந்தது. சத்யாக்கிரஹம் நிறுத்தி வைக்கப்பட்ட போதிலும் சமஸ்தான காங்கிரஸ் மீதுள்ள தடை எடுபடாதிருப்பதால், இனி என்ன செய்ய வேண்டும் என்பதுபற்றி ஒரு முடிவு செய்யப்படும்.



Edited, Printed and Published by Raya Chockalingam for The India Publications Ltd., at the Oolian Power Press, Karaikudi.

